ஸ்ரீ:

# மாளவிகாக்கினி மித்திரீயம்.

Malavikagnimittriyam

by
BHANA BHATTA

மொழிபெயர்த்தவர்,
அபினவ பட்ட பாண
பண்டிதர். ரா. வே. கிருஷ்ணமாசாரியார்.





கும்பகோணம் Kumbakonam
ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடம்

லை] 1922. [1—8—0

# முன்னுரை.

இது காலை இந்தியா என்று வழங்கப்படும் நமது பரத கண்டம் மற்றை நாடுகளை விடப் பல்லாற்றானும் தொன்று தொட்டே சிறப்புற்று விளங்கக் காரணமாயிருந்த பலவற்றுள் ஸ்ரீகாளிதாஸருடைய மேன்மையும், தலையாயவொன்றென்பதை மறுப்பாரில்லை. மென்மைக்குக் கலைமகளது பெண்மையும் வன்மைக்கு வான்மீகியின் ஆண்மையும் ஒருங்கு சேர்ந்ததோர் அவதாரமென்றே இவரைக் கற்றறிந்தோர் கூறுவர். இவருடைய நூல்களை மொழி பெயர்க்காத நாகரிக பாஷையோ, இவருடைய பெரும்புகழைச் செவியுறாத நாகரிக தேசமோ கிடையா.

இவ்வாறு எங்கும் உள்ளிருள் நீங்க எழிற் ஞான விளக்கேற்றிய மஹாகவியிடம் நமது நன்றியறிதலுக்கு அடையாளமாக நாம் செய்யக்கூடியது என்ன? பொற்கோயிலொன்றைக் கட்டி அதில் நவரத்தினம் பதித்த இவருடைய தங்க விக்ரஹத்தை வைத்துப் பூஜித்தாலும், இஃது ஓரதிசயச் செயலாகுமோ?

இத்தகைய மஹாகவியின் கவிதைச் சுவைகளை வடமொழி பயிலாத தமிழரும் அனுபவித்துக் களிப்புறுமாறு இவருடைய கிரந்தங்களைத் தமிழில் மொழிபெயர்க்கவேண்டும் என்ற எண்ணம் வெகு ஆண்டுகளுக்கு முன்னரே எனக்கு உண்டாயிருந்தது. ஆயினும் எனக்குத் தமிழில் விசேஷப் பயிற்சியில்லாமையால் பயந்து அதற்குத் துணியவில்லை.

சிறுபிராயத்திலும் மலையாளபாஷா பண்டிதனயிருந்த காலையிலும் தென்மொழியில் சிறிது பயிற்சி நான் செய்து வந்தமையாலும், சில வருஷங்களாக நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தையும் அதனுரைகளையும் பரிசீலித்து வருவதாலும், வடமொழி நூல்களைத் தென்மொழியில் ஒருவாறு மொழி பெயர்க்க முடியுமென்ற எண்ணம் முளைக்கத் தொடங்கிற்று. அதன் பயனாக எனது வம்ச கூடஸ்தராகிய ஸ்ரீ பாணபட்ட மஹா கவியின் ஹர்ஷ சரிதத்தை மொழிபெயர்த்து அதன் முதற்பாகத்தை அச்சியற்றுவித்து வெளியிட்டேன். சென்னை ஸர்வகலாசாலைத் தமிழ்ப் புஸ்தக நியமன சங்கத்தார் இப்புஸ்தகத்தைப் பாட

மாக வைத்து ஆதரித்ததிலிருந்து எனக்கு ஊக்கம் நாளுமடங்கு வளர்ந்து வந்ததுடன் ஸ்ரீ காளிதாஸருடைய கிருதிகளை மொழி பெயர்க்கவேண்டுமென்று என் உள்ளத்திலாழ்ந்துறங்கிக் கிடந்த எண்ணமும் உடனே எழுந்து, நாளாவட்டத்தில் வளர்ச்சி பெற்றது.

நான் இக் காரியத்திலிறங்கத் தொடங்கும்போது, முன்பே சிலர் இக் கவிராயருடைய சில கிரந்தங்களுக்குச் செய்திருந்த மொழி பெயர்ப்புக்களும் என் நண்பர்கள் மூலம் எனக்குக் கிடைத்தன. இவற்றை நான் பரிசோதித்ததில் சிலவற்றில் சில குறைகளிருப்பினும், இப்பொழுது வெளியிலுலாவும் மாளவிகாக்கினிமித்திரீய மொழி பெயர்ப்பு விபரீத பாடமும் மாறான கருத்தும் கணக்கற்ற தவறுகளும் நிறைந்து, குருமுமாகக் கற்றறிந்தோரின் மனத்தைப் புண்படுத்துவதாயிருப்பதால் அந்த நாடகத்தையே முதன்முதல் மொழி பெயர்க்க வேண்டுமென்று எண்ணினேன். உரையாசிரியராகிய ஸ்ரீ அருணகிரி நாதருடைய அழகிய கருத்துக்களை வெளியிடவேண்டுமென்று கருதியே குமாரஸம்பவ காவியத்தையும் எடுத்துக் கொண்டேன்.

வெறும் மொழி பெயர்ப்பு மாத்திரம் வெளியிடப்பட்டால், மூலத்தின் அருமையான கருத்துக்களும் ரஸசமத்காரங்களும் வெளிப்படா என்று நினைத்து என்னாலானவாறு சில குறிப்புக்களும் எழுதியுள்ளேன். என்னுடைய குறிப்புக்களைக் குறிப்பாகப் பார்த்து மகிழ்ந்து எனக்கு ஊக்கமுண்டாகுமாறு தமது அபிப்ராயத்தை எழுதி யனுப்பிய இருமொழிப் புலவர் ஸ்ரீமான் ம. வீ. இராமானுஜாசாரியார் ஸ்வாமிக்கும், மகிபாலன் பட்டி வித்வான் கதிரேசச் செட்டியாரவர்களுக்கும் எனது நன்றியைச் செலுத்துகின்றேன்.

இம் மொழி பெயர்ப்பில் எனக்குப் பற்பல உதவிகள் புரிந்த எனது நண்பர் நேடிவ் ஹைஸ்கூல் தலைமைப் பண்டிதர் ஸ்ரீமான். பி. ஸ்ரீநிவாஸ ஐயர் அவர்களுக்கு நான் நன்றி செலுத்துவதாகச் சொல்வதை விட, சிறந்த அப்புலவர் இனியும் இவ்வாறே எனக்கு உதவி புரியுமாறு கேட்டுக் கொள்வதையே நான் முக்கியமாகக் கருதுகின்றேன்.

ஸ்ரீ மூனித்ரயமந்திரம்,
கும்பகோணம்.
1—9—22.

ரா. வே. கிருஷ்ணமாசாரியார்.

ஸ்ரீ:

# மாளவிகாக்கினிமித்திரீயம்.



எந்தப் பரமசிவனார் தம்மை அடிபணிபவர்க்குப் பலவகைப் பட்ட பயன்களை அளிக்கும் ஓர் ஐசுவரியம் தமக்கிருப்பினும் தாம் மாத்திரம் (தம்மிச்சைப்படி) (யானைத்) தோலை உடுக்கின்றாரோ, எந்தப் பரமசிவனார் தமது தேஹத்தில் தம் பத்தினியாரை நன்கு அணைத்திருப்பினும் உலகப் பற்றற்ற மனத்தினரான யோகிகளின் முன்னிலையில் நிற்கின்றாரோ, எந்தப் பரமசிவனார் தமது எட்டு மூர்த்திகளால் உலகமனைத்தையும் தாம் தாங்கி நிற்பினும் "இவை நம்முடையவை" என்னும் அபிமானம் கொள்ளுவதில்லையோ, அந்தப் பரமசிவனார் நீங்கள் நல்வழி காண உங்களுடைய இருள் சூழ்ந்த நிலையை அகற்றுவாராக.

---

குறிப்பு.

*வடமொழியில் காவியங்கள் பொதுவில் 'த்ருச்யம்' (பார்க்கத் தக்கது.) என்றும், 'ச்ராவ்யம்'(கேட்கத்தக்கது) என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. த்ருச்யகாவ்யத்திற்கு 'ரூபகம்' என்ற மறு பெயருமுண்டு. ரூபகங்களையும் 'பிரதான ரூபகங்கள்' என்றும், 'உபரூபகங்கள்' என்றும் பிரித்திருக்கின்றார்கள். பிரதான ரூபகங்கள் நாடகம் முதலியன. இவை பத்து. உபரூபகங்கள் நாடிகை முதலியன. இவை பதினெட்டு. இந்த ரூபகங்களில் முதலில் காணப்படும் மங்கள சுலோகத்தை 'நாந்தீ சுலோகம்' என்று கூறுவார்கள். கவிகள் இந்த நாந்தியில் தமது இஷ்ட தேவதையைக் குறித்து ஸ்துதிப்பது பெரும்பான்மையாகக் காணப்படும். நமது காளிதாஸருக்கு இஷ்ட தேவதை சிவபிரானாகையால் அப்பெருமான் இங்கும் புகழப் படுகிறார்.*

*ஓர் ஐசுவரியம்—ஒப்பற்ற ஐசுவரியம்; ஒரு பொருளை மாத்திரம் உடையவராயிருக்கை. ஒரு பொருளை மாத்திரம் உடைய இவர் தம்மை வணங்குவோருக்குப் பல்வேறு வகைப்பட்ட பலன்களை அளிப்பார் என்றல் பொருந்தாது. ஆதலின், இது விரோதமுள்ளதுபோலத்*

தோன்றும். 'ஒப்பற்ற ஐசுவரியம்' என்ற உண்மைப் பொருளால்இவ்வி
ரோதம் நீங்குகின்றத். ஆகையால் இங்கு விரோதாபாஸம் என்ற அல
ங்காரம் இருக்கின்றது. இவ்வாறு பல பயன்களை யளிக்கச்சக்தி வாய்
ந்தவர் மஹாப் பிரபுவாக இருக்கவேண்டுமாகையால், இவர் ஒன்றுமில்
லாத தரித்திரனைப்போலத் தோலை யுடுப்பதும் விரோதமுடையது.
தம்மிச்சைப்படி அதனை உடுப்பதால் முற்கூறிய விரோதம் விலகுகின்
றது. கஜாஸுரனைக் கொன்று அந்தத் தோலைத் தரித்ததாகப் புரா
ணம் கூறும். இதனால் இவருக்கு ஒன்றிலும் ஆசையில்லாமை வெளி
யாயிற்று. யோகிகளின் முன்னிலையில் நிற்பதாவது—தியானஞ்செய்
யும்அவர்களுக்கு முன்பில் தோற்றுவதும், அவர்களுள் சிறந்தவராகிப்
பரமயோகியாக விளங்குவதுமாம். பத்தினியை அணைத்து நிற்பவர் பரம
யோகியாவது விரோதமுடையது. ஐம்புலன்களையும்அடக்கியாளும்திற
மையுள்ள பகவானுக்குப்பத்தினி அடுத்திருப்பதால் யாதொருகெடுதியும்
நேரமாட்டாதென்பது உட்கருத்து. "மனத்தைக்கலங்கச்செய்யும் பதார்
த்தங்கள் ஸமீபித்திருப்பினும், எவர்களுடைய மனம் கலக்க முறுவதில்
லையோ, அவர்களே தீர புருஷர்கள்" என்று குமாரஸம்பவத்தில் இவ்
வாசிரியரே கூறுகின்றார். எட்டுமூர்த்திகள்— பிருதிவி, அப்பு, தேஜ
ஸ், வாயு, ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்கள், சந்திர ஸூரியர்கள், யாகஞ்
செய்பவன். ஒரு சரீரமுள்ளவர்க்கே அபிமானம் அதிகமாக இருக்
கையில், எட்டுச் சரீரங்களிருப்பினும், அவைகளால் உலகமனைத்தை
யும் தாங்கி நிற்பினும், அவற்றில் அபிமானமில்லாமை விரோதமுடை
யது. யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும்
ஜீவாத்மாக்களுக்கே உண்டாகக் கூடியனவாகையால் பரமாத்மாவான
சிவபிரானுக்கு அபிமானமுண்டாகாதது விரோதமுடையதன்று. 'நல்
வழிகாண' என்பது இம்மையிலும் மறுமையிலும் பொருந்தி நிற்கும்.
இருள்—இம்மையில் அறிவின்மை, மறுமையில் அவித்யை. இந்த நாந்
தியில், வரும் கதாபாகத்தை ஸூசனை செய்யவேண்டுமென்பது ரூபக
லக்ஷணமெழுதியவர்களின் கொள்கை. இதை அனுஸரித்து ஒவ்வொ
ரு நாந்தியிலும் பலரும் பலவிதமாகக் கதாபாகங்களைப் புகவிடுவது வழ
க்கம். மேல் வரும் கதையை முழுவதும் நன்றாயறிந்திருந்தால் அவ
வர் மனம்போனபடி கதையைப் புகவிடலாமாகையால், தனியாக நான்
இதனைப்பற்றி எழுத விரும்பவில்லை. வடமொழியில் "ஸந்மார்க்கா
லோகநாய" என்றிருப்பது "நல்வழிகாண" என்று மொழி பெயர்க்கப்
பட்டது. நாட்டியம், "மார்க்கம்" "தேச்யம்" என இருகூறுள்ளது.
மாளவிகை காட்டும் நாட்டியம் மார்க்கமாகையால், அது இங்கு ஸூசி
க்கப்படுகின்றதென்பது அறியத்தக்கது. ரஸானுபவம் செய்யு

(நாந்தியின் முடிவில் ஸூத்திரதாரன் பிரவேசிக்கின்றன்.)

**ஸூத்திரதாரன்**— (திரைப் பக்கமாகத் திரும்பி நோக்கி) துணைவனே, இங்கு வருவாயாக.

(பிரவேசித்து)

**துணைவன்**— அறிஞரே, இதோ வந்தேன்.

**ஸூத்திரதாரன்**—"காளிதாஸர், கதைகளை அழகாகத் தொடுத்து நன்றுயெழுதிய மாளவிகாக்கினிமித்திரீயம் என்னும் நாடகத்தை இந்த வஸந்தோத்ஸவ காலத்தில் நீ ஆட வேண்டும்" என்று ஸபையோரால் கட்டளையிடப்பட்டேன். ஆகையால் பாட்டுப் பாடத் தொடங்கவேண்டும்.

**துணைவன்**—அவ்வாறன்று. பாஸன், ஸௌமில்லகன், கவிபுத்திரன் முதலிய புகழேறிய கவிகளின் நூல்களைத் தவிர்த்து, இன்று உயிருடன் வாழும் காளிதாஸருடைய நூலில் ஸபையோருக்கு வெகுமானம் உண்டாகக் காரணம் என்ன?

---

வேண்டுமானல், ரஜோகுணமும், தமோகுணமும் அடங்க ஸத்துவகுணம் தலை சிறந்து விளங்கவேண்டும்.

நாந்தியின்— நாந்தி முதலியவற்றின் விரிவான இலக்கணங்கள் இங்குக் கூறப்படமாட்டா. தேவதைகள் ஆனந்திக்கிறபடியால் இது "நாந்தி" என்ற பெயர் பெற்றது என்று கூறுவர்.

ஸூத்திரதாரன்— ஸூத்திரத்தைத் தரிக்கின்றவன். ஆட்டக்காரர்களின் தலைவன். ஸூத்திரமாவது கதாபாகங்களின் ஸூசனையாம்.

திரைப்பக்கமாக— வட மொழியிலுள்ள "நேபத்யம்" என்ற பதத்திற்கு "ஆட்டக்காரர்கள் தங்கியிருக்கும் அறை" என்று பொருள் கூறப்படுகின்றது. இதனை அணியறை என்றும் கூறுவர்.

துணைவன்— "பாரிபார்ச்விகன்" என்பதுவடமொழிச்சொல். ஸூத்திரதாரனுடைய பக்கத்திலிருந்துகொண்டு அவனுக்கு உதவிசெய்பவன் என்பது அதன் பொருள். ஆகையால் இங்கே துணைவன் என்று மொழி பெயர்க்கப்பட்டது.

மாளவிகாக்கினிமித்திரீயம்— மாளவிகை என்ற தலைவியையும், அக்கினி மித்திரன் என்ற தலைவனையும் குறித்து எழுதப்பட்டது. நாடகம்— முக்கியமாக நாடக நாயகன் புராணுதிகளில் பிரவித்தனுயிருக்க

**ஸூத்திரதாரன்**— நீ பகுத்தறிவுகுறைந்து பேசுகின்றாய். பார்—

பழையன என்பதைக்கொண்டே எல்லாக் காவியங்களும் சிறந்தவையாகமாட்டா ; அவ்வாறே புதியன என்னும் காரணத்தால் மாத்திரம் அவைகள் இகழத் தக்கவைகளுமல்ல. அறிவுள்ளார் நன்கு ஆராய்ந்து பார்த்தே ஒன்றைக் கைக்கொள்வார். அறிவிலியன்றோ பிறர் வார்த்தையை நம்பி அதன்படி நடக்கும் புத்திப் போக்குடையவன்.

**துணைவன்**— ஆம் ; ஸபையோர்களின் வார்த்தையே நமக்கு மேற்கோள்.

---

வேண்டும். இந்த நாயகன் விஷ்ணு புராணத்தில் கூறப்பட்டிருக்கின்றான். வஸந்தோத்ஸவம்— காமன் பண்டிகை. இது பண்டைக் காலத்தில் வெகு சிறப்புடன் எல்லாராலும் கொண்டாடப்பட்டதாகப் பல நூல்களிலிருந்தும் தெரியவருகிறது.

பாஸன்— பாஸன்முதலிய கவிகளைப்பற்றி முகவுரையில் விரிவாக ஆராயப்படும். "காவ்யாதிகளின் இலக்கணம்கூறிய பழைய கிரந்தகாரர்கள், 'தோஷம் என்பது பதம் அர்த்தம் முதலியவைகளில் வரக் கூடும்' என்று மொழிந்தார்களே தவிர, நூல் முழுவதிலுமே வரக்கூடிய தோஷமொன்றிருப்பதாகக் கூறவில்லை. ஆனால் அவ்வாறுள்ள ஒரு தோஷமும் உண்டு. அதாவது கிரந்தம் எழுதிய ஆசிரியன் உயிருடனிருப்பதே" என்று சிவலீலார்ணவத்தில் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் எழுதுகிறார்.

அறிவிலியன்றோ— "மூர்க்கர்கள் பிறரால் பூஜிக்கப்பட்டவனையே காரணமறியாமல் தாமும் பூஜிப்பார்கள்" என்று மஹா பாரதம் உத்யோக பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. "ஒவ்வொரு காவியமும் அது செய்யப்பட்ட ஸமயத்தில் புதியதே. காலம்செல்லச்செல்ல எல்லாம் பழையனவே. ஆதலின் பழமையாலும் புதுமையாலும் ஏற்றமோ தாழ்வோ யாதொன்றும் உண்டாகமாட்டாது" என்று ஸ்ரீ வேதாந்ததேசிகர் எழுதுகின்றார். இந்த சுலோகத்தின்போக்கை உற்றுநோக்கி ஆராய்ந்தால் இந்த நாடகம் காளிதாஸரால் முதன் முதலில் எழுதப்பட்டதென்பது பெறப்படும். இது முகவுரையில் விரிவாகப் பேசப்படும்.

*ஸூத்திரதாரன்*—ஆகையால் நீ இனிக் காரியத்தைவிரைவில் நடத்தவேண்டும்.

அண்டித் தொண்டுபுரிவதில் வல்லமை வாய்ந்த தாரிணி தேவியாரின் இப்பணியாளர்கள், அத்தேவியாரின் ஆணையைச்சிரத்தால் வஹித்துச் செய்ய விரும்புவதுபோல, நானும் முன்பு சிரமேற்கொண்ட ஸபாவாஸிகளின் கட்டளையை நிறைவேற்ற விரும்புகின்றேன்.

[சென்றார்கள்.

பிரஸ்தாவனை முற்றிற்று.

---

(பிறகு வேலைக்காரி யொருத்தி பிரவேசிக்கின்றாள்.)

*வேலைக்காரி*— "புதிதாகக் கற்பிக்கப்படும் 'சலிதம்' என்ற நாட்டிய விஷயத்தில் மாளவிகையின் பயிற்சி எவ்வாறு இருக்கின்றது?" என்று நாட்டியாசாரியராகிய ஆர்யகணதாஸரைக் கேட்டறிந்து வருமாறு தாரிணி தேவியால் நான் கட்டளையிடப்பட்டேன். ஆகையால் ஸங்கீத சாலையைக் குறித்துச் செல்கின்றேன்.

[நடக்கின்றாள்.

---

*அண்டி*—வரப்போகும் பாத்திரங்களை (வேஷக்காரர்களை) ஸூசனை செய்யவேண்டுமென்று இலக்கண நூல்களிலிருப்பதால் இவ்வாறு உவமை கூறப்பட்டது.

*பிரஸ்தாவனை*— நடக்கவேண்டிய காரியங்கள் சுருக்கத்தில் பிரஸ்தாவிக்கப்படுகிறபடியால் இந்தப் பாகம் "பிரஸ்தாவனை" எனப்படுகின்றது.

*சலிதம்*— இது சர்மிஷ்டை செய்தது. இதில் மனவுணர்ச்சிகளைக்காட்டக்கூடிய அபிநயங்கள்தாம் பெரும்பாலும் நிறைந்துள்ளன. ஆகையால் இதை ஆடுவது அரிது. இதனை ஆடுவார் தவறுவது எளிது. "ச (உட) லிதம்" என்ற வடமொழிச் சொல்லுக்கு ஏமாற்றும் தன்மையுள்ளது என்பது பொருள்.

(பிறகு வேறொரு வேலைக்காரி கையில் ஓர் ஆபரணத்துடன் பிரவேசிக்கின்றாள்.)

**முதலாமவள்**—(இரண்டாமவளை நோக்கி) கௌமுதிகே, என்னடி; உனக்கு இவ்வளவு இறுமாப்பு?. நீ என் ஸமீபமாகவே என்னைக்கடந்து செல்கின்றாயாயினும் இந்தப் பக்கம் உன் பார்வையைச் செலுத்தாமல் செல்கின்றாயே ?.

**இரண்டாமவள்**—ஓஹோ வகுளாவலிகையா!. நாகமுத்திரையுள்ள, தேவியின் இந்தமோதிரத்தைத் தட்டானிடமிருந்து இப்பொழுதுதான் வாங்கிக்கொண்டு வந்தேன். அதன் அழகை உற்று நோக்கிக்கொண்டிருந்தமையால் இவ்வாறு நீ குறை கூற நேர்ந்தது.

**வகுளாவலிகை**— (பார்த்து) உனது பார்வை தக்க இடத்தைத்தான் பற்றி நிற்கின்றது. பூந்தாதுகள்போன்ற கிரணங்களை வீசும் இம்மோதிரத்தால் உனது நுனிக்கை பூத்திருப்பதுபோலப் புலப்படுகின்றது.

**கௌமுதிகை**— தோழி , எங்குப் புறப்பட்டாய்?

**வகுளா**—தேவியின் கட்டளைப்படி நாட்டியாசாரியரான கணதாஸரிடம்போய், "கற்பிப்பதைக் கிரஹித்துக் கொள்வதில் மாளவிகை எவ்வாறு இருக்கின்றாள்" என்று வினவுவதற்காக.

**கௌமு**— தோழி, இவ்வாறு கல்விப் பழக்கம் காரணமாக மாளவிகை (தேவியாரின்) ஸமீபத்தில் இல்லாமலிருந்தும் அவளை மஹாராஜா பார்த்து விட்டாராமே !.

---

நாக முத்திரை— பாம்பின் உருவம் அமைந்துள்ளது. இந்த மோதிரம் நான்காமங்கத்தில் உபயோகப்படுகிறது. நாயிகா நாயகர்களுடைய முடிவான சேர்க்கைக்கு இது பெரிதும் உதவுகின்றது. சாகுந்தலத்திலுள்ளதுபோல முதலங்கத்தில் பொதுமையில் இலகுவாகப் பிரஸ்தாவிக்கப்படும் இம்மோதிரவிஷயம் முடிவில் காரியத்தில் முக்கியமானதாக வெளிப்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது. "இந்த நாடகம் காளிதாஸருடையதன்று" என்று கூறுவோர் இதனைச் சிந்திக்கவேண்டும். விரிவு முகவுரையிற்கொள்க.

வகுளா— ஆம். சித்திரத்தில் தேவியின் பக்கத்தில் (மாளவிகை) வரையப்பட்டிருந்தாள். ஆகையால் மஹாராஜா பார்க்க நேர்ந்தது.

கௌமு— அஃது எங்ஙனம்?

வகுளா— மஹாராணியார் சித்திரசாலைக்கு வந்து, அங்கு நாட்டியாசாரியரின் சித்திரத்திற்குப்புதிதாக வர்ணம் தீட்டியதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அதே ஸமயத்தில் மஹாராஜாவும் திடீரென அங்கு வந்து சேர்ந்தார்.

கௌமு— பிறகு பிறகு.

வகுளா— பிறகு தேவியார் மஹாராஜாவுக்குமுறைப்படி உபசாரம் செய்தபின், மஹாராஜாவும் மஹாராணியும் ஒரே ஆஸனத்தில் அமர்ந்தனர். அப்பொழுது மஹாராஜா சித்திரத்தில் தேவியாருடைய பல பணிப்பெண்களின் நடுவில் தேவியாரை அடுத்து எழுதப்பட்டிருக்கும் ஒருபணிப்பெண்ணைப் பார்த்து அவளைக் குறித்து தேவியாரை வினவினர்.

கௌமு— என்னென்று?

வகுளா— "தேவி, உனது ஸமீபத்திலுள்ள இப்பெண் புதிதாகக் காணப்படுகின்றாளே; இவள் பெயர் என்ன?" என்று.

கௌமு—அழகிய உருவங்களில் ஆதரம் இடம் பெறுமன்றோ; பிறகு பிறகு.

வகுளா— பின்னர் தேவியார் மஹாராஜாவின் வார்த்தையைப் பாராட்டாமல் மறுமொழிகூறாதிருந்தபோது மஹாராஜாவுக்குப் பலவாறு ஸம்சயங்கள் உதிக்க, மேன்மேலும் தேவியாரை வற்புறுத்தத் தொடங்கினர். அப்பொழுதும் தேவியார் மறுமொழி கூறவில்லை. ஆனால் ஸமீபத்திலிருந்த ராஜ குமாரி வஸுலக்ஷ்மி "அப்பா இவள் மாளவிகை." என்று கூறிவிட்டாள்.

---

அழகிய உருவங்களில்— இங்குப் பொதுவாக ஆதரம் என்றும், அது அனுராகத்தில் முடிவு பெறுகிறது.

அப்பா— வடமொழியில் "ஆவுத்த" என்றொரு பாடமுண்டு

கௌமு— (புன்சிரிப்புடன்) இது குழந்தைப் பருவத்திற்கு ஏற்றதுதான். அதற்கு மேல் நடந்ததைச் சொல்.

வகுளா— வேறு என்ன? இப்பொழுது மாளவிகை மஹாராஜாவின் கண்ணிற் படாதவாறு மிகவும் ஊக்கத்துடன் பெரிதும் காப்பாற்றப்படுகிறாள்.

கௌமு— ஸகி, உனக்கிட்ட கட்டளையை நீ நிறைவேற்று. நானும் இம்மோதிரத்தைத் தேவியினிடம் சேர்ப்பிக்கின்றேன்

[சென்றனர்.

வகுளா— (சிறிது தூரம் நடந்து) நாட்டியாசாரியரான ஆர்யகணதாஸர் ஸங்கீத சாலையினின்றும் புறப்பட்டு வருகின்றார். அவர் என்னைக் காணுமாறு செல்லுகின்றேன்.

[நடக்கின்றனள்.

(பிரவேசித்து)

கணதாஸன்—உலகத்தில் எவனும் தனது குலவித்தையை (அது எவ்வாறு இருப்பினும்) வெகுமதித்துப் புகழ்ந்து பேசுவது இயற்கைதான். ஆனால், எனது குலவித்தையாகிய நாட்டியத்தைப் பற்றியோ நான் பொய்ப்பெருமை கொள்ளவில்லை. ஏனெனில்—

பரதர் முதலிய முனிவர் இந்த நாட்டியத்தைத் தேவர்கள் கண்ணாரக்கண்டு களிக்கும் அழகிய யாகமெனக் கூறுகின்றனர். இந்நாட்டியத்தைப் பரமசிவனார் பார்வதியுடன் கூடிய தமது தேஹத்தில் இரு கூறாகப் பிரித்தருளினார். இந்த

---

அர்தப்பாதத்திற்கு ஸஹோதரீபர்த்தா (அத்திம்பேர்) என்பதுபொருள். சில குழந்தைகள் தம் தகப்பனாரை மாமாஎன்றும் மற்றும் கூறி அழைப்பதையொப்ப இவ்வாறு அழைப்பதும் பொருந்தும்.

பரதர்— "பரதர்" என்ற ருஷி நாட்டிய சாஸ்திரம் செய்தவர். பாவம், ராகம், தாளம்ஆகிய மூன்றினுமுள்ள முதலெழுத்துக்களைச் சேர்த்து "பரத" என்று இவருக்குப் பெயரிடப்பட்டதாக அறிகின்றோம். மற்றை யாகங்களிற்போல் இதில் பிராணி ஹிம்ஸை இல்லாமையால் இதனை அழகிய யாகமென்றார், பரமசிவனார் புருஷ நாட்டியமா

நாட்டியத்தில், ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களால் ஏற்படும் உலக நடைகள் யாவும் பற்பல உணர்ச்சிகளுடன் காணப்படுகின்றன. இந்த நாட்டியமொன்று தான் வெவ்வேறு ருசியுடைய பலரையும் பல விதத்திலும் ஒருங்கே மகிழ்விக்கும் தன்மையுடையது.

வகு— (அணுகி) ஐயா, நமஸ்கரிக்கின்றேன்.

கண— அம்மா, நீ நீடூழி வாழ்க.

வகு— "பாடங்களைக் கிரஹிக்கிற விஷயத்தில் தங்களுடைய மாணவி அதிகம் தங்களைச் சிரமப்படுத்தாமலிருக்கின்றுளா?" என்று தேவியார் தங்களை வினவுகின்றார்.

கண— "மிகு ஸாமர்த்தியமும் சிறந்த புத்தி கூர்மையுமுடையவள்." என்று தேவியிடம் விண்ணப்பஞ் செய். அதிகம் பேசிப் பயின் என்?.

உள்ளுணர்ச்சிகளை வெளியிடும் அபினயங்களை நான் அவளுக்குச் சொல்லிக் கொடுப்பதுண்டு. அவைகளைக் கற்பித்த மாதிரியிலும் மேலான மாதிரியில் சிறப்பாக அவள் அபினயித்துக் காட்டுவாள். அப்பொழுது அவள் அவைகளை எனக்கே திருப்பி உபதேசிக்கின்றுளோ என்று எனக்குத் தோன்றும்.

வகு— (மனத்துள்) இவள் இராவதியை மீறி விட்டாள்

---

கிய தாண்டவத்தையும் ஸ்திரீ நாட்டியமாகிய லாஸ்யத்தையும், முறையே தம் மூலமாகவும் பார்வதி மூலமாகவும் வெளியிட்டாரென்று நாட்டிய சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. உலகத்தில் ஒருவனுடைய நடத்தை, அதன் நிலைமையை அனுஸரித்து மற்றவர்க்கு ஓர் உணர்ச்சியையே உண்டாக்கக்கூடியது. நாட்டியத்திலோ அஃது அவ்வாறன்றிப் பல வுணர்ச்சிகளையும் உண்டாக்குகின்றது. இது ரஸிகர்களுக்குமட்டும் அனுபவத்தில்வரும் விஷயம்.

மிகுஸாமர்த்தியம்— இஃது அபினயிப்பதில்.

இராவதியை— இஃது ஊன்றிப் பார்க்கவேண்டிய வாக்கியம். நாட்டியப் படிப்பில் இராவதியினும் இவள் சிறந்தவளாகிவிட்டாள் என்ற பொருள் வெளிப்படையானது. இங்கே கவி மாளவிகைக்கு

(பிறகு அரசன் பிரவேசிக்கின்றான். வேலைக்காரர்களும் கூட வந்து தத்தமக்குரிய இடங்களில் இருக்கின்றனர். கையில் ஒரு பத்திரிகையுடன் மந்திரியும் வந்து அரசனை அடுத்து நிற்கின்றான்.)

**அரசன்**— (பத்திரிகையை முன்னரோ படித்தறிந்து நிற்கும் மந்திரியைப் பார்த்து) வாஹதகா, விதர்ப்ப நாட்டான் ஒப்புக்கொள்வது என்ன?

**மந்திரி**— தேவ, தனது அழிவுதான்.

**அரசன்**— அவன் எழுதியிருக்கும் செய்தியைக் கேட்க விரும்புகின்றேன்.

**மந்திரி**— இப்பொழுது அவன் அடியில் வருமாறு விடை எழுதியிருக்கின்றான்——"உன்னுடைய சிறப்பன் பிள்ளையாகிய மாதவஸேனன் தனது ஸஹோதரியை எனக்கு மண முடிப்பதாக உடன்பட்டபடி, தன்னுடைய மனைவி ஸஹோதரி மந்திரி முதலியவரையும் அழைத்துக்கொண்டு இவ்விடத்திற்குப் புறப்பட்டு வருகையில் நடு வழியில் உனது எல்லைக்கோட்டைகாப்போன் அவனை வலுவில் தடுத்துப் பிடித்துக்கொண்டான். நீ எனக்காக அவனை மனைவி ஸஹோதரிகளுடன் விட்டுவிடவேண்டும்." என்று மேன்மை பொருந்திய தாங்கள் எனக்குக் கட்டளையிட்டிருந்தீர்கள். ஒரு மரபினரான தாயாதி அரசர்கள் தம்முள் எத்தகைய உணர்ச்சியைக் கொண்டிருப்பார்கள் என்பது தங்களுக்குத் தெரியாததன்று. ஆதலின் இந்த

---

உன்னுடைய— இதுமுதல் "விட்டுவிடவேண்டும்" என்பதீறாகவுள்ள வாக்கியம் அக்கினிமித்திரனுடையது. "ஒரு மரபினரான" என்று தொடங்கிச் "சிறையிலிருந்து விட்டுவிடுகின்றேன்" என்பது வரையிலுள்ளது விதர்ப்பநாட்டானின் மறுமொழி.

மனைவி ஸஹோதரிகளுடன்—ஸஹோதரிக்குத் துணையாக மனைவியையும் விடவேண்டுமென்பது கருத்தாம். மணமகளைக் கொடுக்கும்பொழுது முறைப்படி தம்பதிகள் சேர்ந்து கொடுக்கவேண்டுமாகையால், அதனை உத்தேசித்ததாகவுமாம்.

விஷயத்தில் தாங்கள் நடுநிலைமையை வஹிப்பதுதான் ஏற்றது. மாதவஸேனனுடைய உடன்பிறந்தாளோ அந்தக் குழப்பத்தில் காணாமற்போயினள். அவளைத் தேடத் தக்கவாறு முயல்கின்றேன். அஃதன்று; எவ்வாற்றானும் மாதவஸேனனை விடுவித்தே ஆகவேண்டுமென்று தாங்கள் வற்புறுத்துவதானால் நானும் வற்புறுத்த விரும்பும் எனது அபிப்பிராயமொன்றைத் தாம் கேட்கவேண்டும்.——

தங்களால் சிறையிலிடப்பட்டவனும் மௌரிய மந்திரியுமாகிய என் மைத்துனனைத் தாங்கள் இப்பொழுது சிறையிலிருந்து விடுவீர்களானால், நானும் உடனே மாதவஸேனனைச் சிறையிலிருந்து விட்டுவிடுகின்றேன்."

**அரசன்**— (கோபத்துடன்) என்ன; இவன் தன்னைத்தான் அறியாமல் என்னிடம் காரியமாற்றங்கொண்டா பேசுகின்றான்? வாஹதகா, வைதர்ப்பன் அடுத்த நாட்டானாகையால் நமக்கு இயற்கைப் பகைவன். மேலும், இப்பொழுது நமக்கு விரோதமாகக் காரியங்களை நடத்தியும் வருகிறான். இவன் நாம் எதிர்க்கவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டான், ஆதலின் நாம் முன்னரே முடிவுசெய்தவண்ணம் இவனை வேருடன் களைவதற்காகப் படைகளுடன் அங்குச் செல்லும்படி வீரஸேனனுக்குக் கட்டளையிடுக.

**மந்திரி**— தேவரீருடைய ஆணைப்படி.

**அரசன்**— அல்லது, நீர் என்ன அபிப்பிராயப்படுகின்றீர்?

---

மௌரியமந்திரி—மௌரியவம்சத்தரசனுடைய மந்திரி. இங்குச் சரித்திரஸம்பந்தமுள்ள விஷயம் முகவுரையில் விரிவாக ஆராயப்படும்.

காரியமாற்றம்— தாங்கள் என் மைத்துனனை விட்டால் நான் தங்கள் மைத்துனனாவோனை விடுவேன் என்று எழுதியபடியால் இது காரியமாற்றமாகின்றது. வாஹதகன் என்பது மந்திரியின் பெயர்.

அல்லது— அரசன், ஸ்வாயத்தஸித்தி அதாவது ராஜ்யகாரியங்களெல்லாவற்றையும் தானே நேரில் ஆராய்ந்து தன் மனப்படி முடிவுசெய்து நடப்பவன் என்றும், ஸசிவாயத்தஸித்தி அதாவது ஸகல பாரங்களையும் மந்திரியிடம் ஒப்பித்துவிட்டுத் தான் பாட்டுக்கூத்து முதலி

**மந்திரி**— நீதி முறைப்படியே தேவரீர் சொன்னீர்கள்.—

ஒரு மரம் வைக்கப்பட்டு அதிக நாளாகாமையால் வேரூன்றுதிருக்க அதனை அசைத்துப் பிடுங்கிவிடுதல் எவ்வாறு எளிதோ, அவ்வாறே ஒரு பகைவன் அரசியல் ஏற்று அதிக நாளாவதற்குள் அவனுக்கும் அமைச்சர்முதலிய அங்கத்தினர்களுக்கும் குடிகளுக்கும் தம்முள் நல்லுணர்ச்சி உரம் பெற்றிராதாதலின் அப்போது அவனை வேரற அழித்துவிடுதல் எளிதாம்.

**அரசன்**— ஆம், நீதிநூலாசிரியர்களின் கொள்கை பொய்த்துப்போவதன்று. ஆதலின் இந்த ஓலை எழுதியனிதயே காரணமாகக்கொண்டு, நமது ஸேனையை அங்கு அனுப்ப வேண்டும்.

**மந்திரி**— அப்படியே.

[சென்றன்.

(பரிஜனங்கள் தத்தமக்குரிய காரியங்களைச் செய்துகொண்டு அரசனைச் சூழ்ந்து நிற்கின்றர்கள்.)

(பிரவேசித்து)

**விதூஷகன்**—"கௌதமா, நான் தற்செயலாய் சித்திரத்தில்

---

யவைகளில் ஈடுபடுபவன் என்றும், உபயாயத்தஸித்தி அதாவது மந்திரியுடன் கலந்து காரியங்களைச் செய்பவன் என்றும் மூன்றுவிதமாகப் பிரிக்கப்படுகிறன். நமது அக்கினிமித்திரன் உபயாயத்தஸித்தி என்பது இங்கு வெளியாயிற்று.

ஒரு மரம்— இதனல் விதர்ப்பநாட்டான் அரசியலேற்று அதிக நாளாகவில்லை என்பது தெரிகிறது.

ஓலை— ஓலை=பத்திரிகை. நாம் எழுதிக் கேட்டதற்கு உடன்படாமல் மறுமொழி அனுப்பியிருப்பதே, அவனுடன் நாம் போர்தொடுக்கப் போதிய காரணமாமென்பது கருத்து.

விதூஷகன்— "சிருங்காரியான நாயகனுக்கு ஸ்திரீவிஷயமாகத் துணைபுரிபவர், "பீடமர்த்தன், விடன், சேடன், விதூஷகன் என்ற நால்வராவர். இவருள் பீடமர்த்தன், நாயகனிடத்தில் பக்தியுள்ளவனும், நாயகனேடு கூடவேயிருப்பவனும், குணங்கொண்டு நாயகனை

கண்ட மாளவிகையை நேரில் காண நீ ஏதாவதொரு வழி தேடவேண்டும்." என்று மேன்மை தங்கிய அரசர் என்னிடம் சொல்லியிருந்தார். நானும் தக்கவாறு ஓர் உபாயம் செய்திருக்கின்றேன். அதனை அரசரிடம் தெரிவிக்கவேண்டும்.

[நடக்கின்றான்.

---

விடச்சிறிது குறைந்தவனும், நாயகனிடம் அன்புப் பிணக்குக்கொண்ட நாயகியைத் தெளிவிக்க வல்லமையுள்ளவனுமாயிருப்பான். காம சாஸ்திரப் பயிற்சியும் கலைஞானமுமுள்ளவன் விடனெனப்படுவான். நாயிகா நாயகர்களைச் சேர்த்துவைப்பதில் சக்திவாய்ந்தவனாயிருப்பான் சேடன். விதூஷகன், விகாரமுள்ள அல்லது தானாக விகாரப்படுத்திக்கொண்ட தனது அவயவத்தாலும் பேச்சாலும் வேஷத்தாலும் பிறரை நகைக்கச் செய்பவனாக விருப்பான். இந்த நால்வருக்கும் வேண்டிய குணங்களாவன:— இடத்தையும் பொழுதையுமறிந்தொழுகுதல், பேச்சில் இனிமை, ரஸந்தெரிந்திருத்தல், ஊக்கமுண்டாக்குவதில் வல்லமை, சொன்னபடி சொல்லல், ரகஸியமான விஷயத்தை வெளியிடாது காத்தல் முதலியனவாம்." என வடவாசிரியர் கூறுவர். எனவே, "நமக்கு வேறு காரியத்தில் துணை புரிபவன்" என்ற அரசனுடைய வாக்கியத்தில் வேறு காரியமாவது காமமெனும் காரியமாமென்பது வெளிப்படை.

**நானும் தக்கவாறு**— காளிதாஸர் தமது மூன்று நாடகங்களிலுமுள்ள நாயிகைகளுள்ளும் நாயகர்களுள்ளும் ராஜ்குமாரர்களுள்ளும் பரஸ்பரம் அழகிய சில வேறுபாடுகளைக் காட்டியிருப்பதுபோலவே, விதூஷகர்களுள்ளும் வேறு பாட்டைக் காட்டியிருக்கின்றார். இந்த நாடகத்தில் விதூஷகன் அரசனுக்கு உபகாரியாகவும், விக்கிரமோர்வசீயத்தில் அபகாரியாகவும், சாகுந்தளத்தில் ஒன்றுக்கு முதவாதவனாகவும் காட்டப்பட்டிருக்கின்றான். இவைகளுக்குள்ள காரணங்களைப் பொது முகவுரையில் விரிவாகக் கூறுவோம். இருக்கட்டும்; நாட்டியாசாரியர்களுடைய இச்சண்டையின் பயனாக, இவர்களின் மாணவிகள் வெளிவரக்கூடுமென்பதை விதூஷகன் எங்ஙனம் எதிர்பார்க்கலாம்? மாணவிகளின்றியே இது முடிவடையாதென நினைக்க விதூஷகனுக்கு அகக்கண்ணுண்டோ? ஆம்; இஃதொரு நல்ல கேள்வி. இதற்கு ஸமாதானம் இவ்வாறு—இந்த விதூஷகன் பொதுவாக மற்றவரை விடச் சிறந்த நுண்ணறிவுள்ளவன். இதனை "ப்ரஜ்ஞாசக்ஷு:=ஞானக்கண்" என்ற

**அரசன்**— (விதூஷகனைப் பார்த்து) நமக்கு வேறு காரியத்தில் துணை புரிபவன் இதோ வருகின்றான்.

**விதூஷகன்**— (அடுத்துச் சென்று) நீங்கள் வளர்ந்தோங்குக.

**அரசன்**— (தலையை அசைத்து) இங்கே உட்காருக.

(விதூஷகன் உட்கார்ந்தான்.)

**அரசன்**— தோழ, உனது ஞானக்கண் (அக்காரியத்தில்) வழியைக் கண்டு பிடித்ததா?

**விதூஷகன்**— நான் செய்திருக்கும் சூழ்ச்சியின் பயனை வினவுக.

**அரசன்**— தோழ, எங்ஙனம்?

**விதூஷகன்**— (காதில்) இங்ஙனம்.

**அரசன்**— நண்ப, நன்று; திறமையாகவே ஆரம்பஞ் செய்திருக்கின்றாய்? யாம் மாளவிகையைக் கண்ணாரக் காணுவது அரிது என்று முன் எண்ணினேமாயினும் இப்பொழுது அது கைகூடலாமோவென்று எதிர் பார்க்கின்றோம்.

---

அரசன் வார்த்தையால் நாம் அறியலாம். ஆதலின் மதிநுட்பமுள்ள இவன் முன்னரே இவ்வாறு முடிவு ஏற்படக் கருதி, அரசிக்கு வேண்டியவளாகிய பண்டிதகௌசிகியையும் தனது புத்திசாதுரியத்தால் தன் காரியத்தில் துணைபுரியுமாறு இசைவித்திருந்தான். மாதவஸேனன் மந்திரியின் ஸஹோதரியான கௌசிகியோ, "மாளவிகை மன்னனுக்குரியவள்" என்பதை நன்கு அறிந்தவளாதலின், தனக்குப் பெரிதும் பிரியமான இக்காரியத்தில் விதூஷகனின் வேண்டுகோளை மதிப்பவள் போல நடித்துத் தானும் துணைசெய்ய இணங்கினாள். அப்பொழுதே அரசன் பேசவேண்டியது இன்னது, கௌசிகியும் விதூஷகனும் இவ்வாறு பேசவேண்டுமென்று ஓர் அறுதிப்பாடும் நடந்திருக்கலாம். இதன் அழகை ஆங்காங்குக் காட்டுவோம். எனவே, "நானும் தக்கவாறு ஓர் உபாயம் செய்திருக்கின்றேன்" என்று விதூஷகன் மனவெழுச்சியுடன் கூறியது பொருந்தாததன்று.

பயனை வினவுக—செய்த உபாயம் பலன் தருந்தறுவாயிலிருக்க உபாயத்தை வினவுதல் வேண்டாம் என்பது கருத்து.

காதில்— மேல் ஆடிக்காணும் விஷயத்தை வெளிப்படையாகச் சொல்லாமல், காதில் சொல்வது நாடகமுறை.

ஏன் ?

ஒருவன் தான் பிரபுவாயினும் துணையிருந்தால் மட்டுமே தடையிற்பட்ட பொருளை அடையமுடியும். ஒருவன் கண்ணு ள்ளோனாயினும் காணும்பொருளை இருளில் விளக்கின்றிக் காணமுடியாது.

(அணியறையில்)

மேன்மேலும் தற்புகழ்ச்சி செய்வது வேண்டாம்; வேண்டாம். நமக்குள் ஏற்றத் தாழ்வுகள் அரசர் முன் னிலையில் வெளியாகலாமே.

**அரசன்**— நண்ப, உனது அழகிய தந்திரமெனும் மரம் பூத் துவிட்டது.

**விதூஷகன்**— பழத்தையும் பார்ப்பீர்கள்.

(பிறகு கஞ்சுகி பிரவேசிக்கின்றன்.)

**கஞ்சுகி**— பிரபுவே, "பிரபுவின் கட்டளை நிறைவேற்றப்பட் டது." என்று மந்திரி வணக்கமாகத் தெரிவிக்கின்றார்.

பா (ஹா) வங்களே உருவெடுத்து நேரில் வந்தாற்போல, ஹரதத்த கணதாஸர்களென்னும் நாட்டியாசாரியர்கள் இருவ ரும் ஒருவரை யொருவர் வெல்லும் கருத்தினராய்த், தேவ ரீரைக் காண ஊக்கத்துடன் வந்திருக்கின்றனர்.

---

துணையிருந்தால்—சிறந்த இக்கருத்து, இந்த நாடகத்தில் மேல் வரும் ஒவ்வொரு பாத்திரத்திலும் ஒவ்வொரு கதாபாகத்திலும் பிரதி பலிப்பதை மனமூன்றியுணர்க.

கஞ்சுகி— கஞ்சுகி என்பவன், நற்குணங்கள் பொருந்தியவனும் எல்லாக் காரியங்களிலும் ஸமர்த்தனும், கிழவனும், அந்தப்புரத்தில் ஸஞ்சரிப்பவனுமான பிராமணன்.

பா(ஹா)வங்களே—பாவங்களாவன உள்ளுணர்ச்சிகள். இவைக ளை உள்ள நிகழ்ச்சி அல்லது குறிப்பு எனத்தமிழாசிரியர் கூறுவர். இந்த பாவங்கள் "ஸ்த்தாயிபாவங்கள்" முதலியனவாய்ப் பல கூறு கொண் டன. சந்திரன் தாமரைப்பூ முதலிய பதார்த்தங்களை அபினயித்துக் காட்டுதல் அவ்வளவு கஷ்டமுள்ளதல்ல. உணர்ச்சிகளை அபினயத்தால் வெளிப்படுத்துதல் அரிதினும் அரிது. இதற்கு முகமும் முக்கியமாகக் கண்ணும் சொன்னபடி ஆடவேண்டும். பா (ஹா) வாபினயத்தை வட வாசிரியர்கள் மிகச் சிறப்பாக நிரூபித்திருக்கிறார்கள். இத்துணைச் சிறப்

*அரசன்*— *அவ்விருவரையும் அழைத்து வா.*

*கஞ்சுகி*— *தேவரீர் ஆஜ்ஞைப்படியே.*

(சென்று அவர்களுடன் வந்து)

பெரியோர்கள் இவ்வழி வரவேண்டும், இவ்வழி வர வேண்டும்.

**ஹரதத்தன்** — (அர்சனைப்பார்த்து) என்னேமன்னவரின்மாட்சி! *எளிதில் அணுகலாமோ? ஆம்; அவ்வாறே*—

இவ்வரசர் எனக்குப் பழக்கம் இல்லாதவரும் அல்லர்; அச்சந்தரும் ஆகிருதி அமைந்தவரும் அல்லர். ஆயினும் நான் கூச்சத்துடன் இவரருகு செல்கின்றேன். இவர் கடலை ஒப்ப நொடிதோறும் கண்களுக்குப் புதியவராகவே தோன்றுகின்றார்.

---

புற்ற பாவாபினயத்தைத் தாங்கள் செய்துகாட்டுவதிலும் மாணவர்களுக்குப் பயன்பட உபதேசிப்பதிலும் இவ்விருவரும் வெகு ஸாமர்த்தியமுள்ளவரென்ற புகழ், கஞ்சுகி கூட அறியும்படி எங்கும் பரவிக் கிடக்கின்றது. ஆகையால் தான் இவர்கள் "இவர்கள் உருவமெடுத்த பாவங்கள்" என்று கஞ்சுகியால் கூட உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறார்கள். இங்கு ஸமயோசிதமான இவ்வணியின் அழகே அழகு. கோபம், பொறுமை என்ற பா(ஸா)வங்கள் உருவெடுத்து வந்தாற்போல என்று கூறினும் இங்குப் பொருந்தும்.

என்னே— மன்னவர் மாட்சி=மாட்சிமை பொருந்திய மன்னவர். உயர்ந்தவர்களைப் பற்றிப் பேசும்பொழுது இவ்வாறு பேசுவது தான் அழகு. இந்த ரீதியைத் தேசாந்தரங்களிலும் பாஷாந்தரங்களிலும் காணலாம்.

இவ்வாசர்— ஜீவரில் "உருவத்தால் அச்சமுறுத்துபவர், செய்கையால் அச்சமுறுத்துபவர், மஹிமையால் அச்சமுறுத்துபவர் என மூன்றுவகை உண்டு. பிசாச ராக்ஷஸாதியர் முதல்வர், வீரபத்ர பரசுராமாதியர் இரண்டாமவர், அக்கினிமித்திரனைப் போன்ற அரசர் மூன்றாமவர்." என்று சிங்கபூபாலன் எழுதுகிறான். முதல் இரண்டு வாக்கியங்களால், இவ்வரசன் முந்திய இரண்டு வகுப்பிலும் சேர்ந்தவனல்லன் என்பது வெளியிடப்பட்டது. எளிதில் எவனும் அணுகக் கூடியவனாயிருப்பதும், ஒருகாலும் ஒருவனும் அணுகமுடியாதவனாயிருப்

**கணதாவஸன்**— பெரியதோர் ஒளி அன்றோ மனிதவடிவங் கொண்டிருக்கின்றது. ஆம்; அப்படித்தான்.

நான் வாயிற்காப்போனது அனுமதிபெற்றே உட்செல்லுகின்றேன். என்னை அரசரிடம் அழைத்துப் போவோனும் சிங்காதனத்தின் அருகே நடமாடும் கஞ்சுகியே. இங்ஙனமிருந்தும் இவ்வரசரது பேரொளி எனது பார்வையைத் தடுத்துப் பேச்சில்லாமல் தானே, என்னையும் உள்வர விடாது தடைசெய்வது போலிருக்கின்றது.

**கஞ்சுகி**— இதோ பிரபு; நீங்கள் இருவரும் ஸமீபத்திற் செல்லலாம்.

**இருவரும்**— (கிட்டி) தேவரீர் ஓங்கி வாழ்க.

**அரசன்**— உங்கள் வரவு நல் வரவு ஆகுக. (பணியாளனைப்பார்த்து) இந்த ஆன்றோரிருவர்க்கும் ஆஸனங்கள் கொணர்ந்து இடுக.

(இருவரும் ஆஸனங்களில் அமர்ந்தனர்.)

**அரசன்**— மாணாக்கரைக் கற்பிக்கவேண்டிய தறுவாயில் ஆசிரியர் இருவரும் இங்கே இவ்வாறு ஒன்று சேர்ந்து வந்தது ஏனோ?.

---

பதும் அரசனுக்குப் பொருந்ாதவைகளென்ற இக்கருத்தை ரகுவம்சத்திலும் இந்தக் கவி வெளியிட்டிருக்கிறார். இந்தக் கருத்தைத் தழுவி எழுதவந்த பாரவி, தவத்திலிருக்கும் அர்ஜுனனை வர்ணித்தவிடத்தில் "இவனுடைய வைபவத்தைக் கண்டு எவனும் முதன் முதலில் அடுத்துச் செல்லும்போது அச்சமே கொள்வான்." என்று கூறிச் சிறிது தாழ்ந்துவிட்டான். "ஒரு வஸ்து நொடிதோறும் புதிதாகக் காணப்படுதல் தான் அழகின் இலக்கணம்." என்று மாககவி எழுதுகிறான். "நவோ நவோ" என்ற பதச்சேர்க்கை வேதத்திலுள்ளது.

பெரியதோர்— "அரசன் பாலனாயினும் அவனை மனிதன் என நினைத்து இகழக்கூடாது. பெரியதொரு தேவதையன்றோ மனிதவுருவத்துடன் நிற்கின்றது." என்றும், "அரசன் ஸர்வதேஜஸ்ஸ்வரூபி" என்றும் மனு கூறுகின்றார்.

மாணாக்கரை— "சிஷ்யோபதேச" என்ற வடமொழியில், "சிஷ்யா" என்று பெண்பாலும், "சிஷ்ய" என்று ஆண்பாலுமாகப் பிரிக்க

**கணதாஸன்**— தேவ, கேட்கவேண்டும்—நான் நல்லாசிரியரிடம் அபிநய வித்தையைக் கற்றுணர்ந்திருக்கிறேன்; கற்பித்தும் இருக்கின்றேன்; அரசராலும் அரசியாராலும் ஆதரிக்கப்பட்டும் வருகின்றேன்.

**அரசன்**— நன்கு அறிவேன். அதற்கென்ன?.

**கணதாஸன்**— இவ்வாறுள்ள என்னை இந்த ஹரதத்தன் சிறந்த மனிதர்களுக்கெதிரில் "இவன் எனது கால் தூசுக்கும் நிகராகான்" என்று இகழ்ந்தான்.

**ஹரதத்தன்**— பிரபுவே, இவருக்கும் எனக்குமுள்ள தாரதம்மியம், கடலுக்கும் சிறு குட்டைக்கும் உள்ள தாரதம்மியம்போன்றது என்று இவர் தாம் முதலில் என்னை ஏசிப்பேசியவர்; ஆதலால் தேவரீர் இவரையும் என்னையும் சாஸ்திரத்திலும் அதை உபயோகிக்கும் வழிகளிலும் அளந்தறிய வேண்டும். தேவரீரே எங்களுடைய ஏற்றத் தாழ்வுகளை ஆராய்ந்து அறுதியிடக்கூடியவர்.

---

கூடும். "இங்கு வரக் காரணம் என்ன?" என்று மட்டும் கேட்கவேண்டியதாயிருக்க, "மாணுக்கரைக் கற்பிக்கவேண்டிய தறுவாயில்" என்று அரசன் கேட்டது, அரசன் மனத்தில் மாணுக்கியாகிய மாளவிகைவிஷயம் உழலுவதைக் காட்டுகின்றது.

நல்லாசிரியர்— ஒருவன் எத்துணைப் புத்திசாலியாயிருப்பினும் தானுய்ச் சாஸ்திரப் புஸ்தகங்களைப் பாராமல், குருமுகமாகத் தெரிந்து கொள்வது தான் சால்புடையதென்பது இங்கு பெறப்படுகிறது.

அரசராலும்— "புலவர்களும், மங்கைமாரும்,கொடிகளும் பற்றுக்கோடின்றிச் சோபிக்கமாட்டா." என்பது பழமொழி. ஒரு புலவர் நல்லாசிரியரிடம் கற்றுப் பலரையும் கற்பித்து, ஓர் அரசனை அண்டிநிற்பது தான் ஏற்றதென்பதை இதிலிருந்து அறியவேண்டும்.

இவருக்கும் எனக்கும்— இவ்விருவருடைய பேச்சிலிருந்து, கணதாஸன் ஹரதத்தனை விட வயது சென்றவனென்பதும், கணதாஸனிடம் ஹரதத்தனுக்கு நல்ல மதிப்புண்டென்பதும் வெளியாகின்றன. இவர்களுடைய ஏசல்களுள் ஹரதத்தனுடையது வெகு கடுமையுள்ளது. இங்கு முதன் முதலில் ஹரதத்தனைக் கணதாஸன் தூஷித்திருக்க




**விதூஷகன்**— இந்த முடிவு ஆண்மையுடையது.

**கணதாஸன்**— இவ்வேற்பாடு முதன்மையானதே. பிரபுவே, தேவரீர் மனமிருத்திக் கேட்கவேண்டும்.

**அரசன்**— இஃது இருக்கட்டும். ஓரம் காட்டியதாகத் தேவியார் நினைக்கக்கூடும். ஆதலின், பண்டித கௌசிகியாரும் கூட விருக்கத் தேவியாரின் எதிரில் இவ்வாது நடப்பதுதான் நியாயமானது.

---

வேண்டும். இதுவும் பலருடைய முன்னிலையில் நிகழ்ந்திராது. கணதாஸன் இவ்வாறு முதலில் இகழத் தக்கபடி ஏதாவதொரு தந்திரம் விதூஷகன் செய்திருக்கவேண்டும். கணதாஸன் சொன்ன இந்த இழிந்த சொல்லை விதூஷகன் ஹாதத்தனிடம் தெரிவித்துச் சிறு வயதுள்ளவனும் இரத்தக் கொதிப்புள்ளவனுமான அவனைக் கொண்டு பிரதான புருஷர்களுடைய முன்னிலையில் கணதாஸனைக் குறித்து மிகத் தாழ்வான வசைமொழிகளைச் சொல்லும்படி ஏற்பாடு செய்திருக்கவேண்டும். பிரதான புருஷர்கள் முன்னிலையில் சொல்லும்படி செய்தது, கணதாஸனுக்குக் கொடுங்கோபம் உண்டாவதற்காக. இவ்வளவு தூரம் சூழ்ச்சி நிகழ்த்திய விதூஷகன் இங்கு ஒன்றுமறியாதவன்போலச் சும்மா கேட்டுக் கொண்டிருக்கிறான். விதூஷகனுடைய உண்மையை அறியாத இவ்விருவரும் அவனிடம் முழுநம்பிக்கை கொண்டிருப்பதால் இந்த ஸமயத்தில் விதூஷகனை வெளிக்கிழுக்கவில்லை. அல்லது, விதூஷகன், வேறு மனிதனைக்கொண்டாவது இவ்வாறு இருவருக்குள் பிணக்கினை உண்டாக்கியிருக்கவேண்டும். மேலில் "ஆட்டுக்கடாச் சண்டையைப் பார்ப்போம்." என்று விதூஷகன் சொல்வதை இவ்விருவரும் கேட்டுக்கொண்டிருப்பதிலிருந்து விதூஷகன் பிறமனிதர்மூலம் சண்டையைக் கிளப்பிவிட்டிருக்கவேண்டுமெனக் கொள்வது நன்கு பொருந்துகின்றது.

இந்த முடிவு— "கோழைத்தனமில்லாமல் பௌருஷத்துடனிருக்கின்றது" என்று சொல்லி இருவரையும் சண்டையில் உத்ஸாஹப்படுத்துகிறான்.

இஃதிருக்கட்டும்— மாளவிகையை அரங்கத்திற்குக் கொண்டுவருவது வரையில் முன்னரே முடிவு கட்டியாய் விட்டது. இவ்வாறு செய்யும்போது ஒரு ஸமயம் தாரிணிக்குத் தன்மீது ஐயப்பாடு உண்டாகலாமென்று எண்ணி, அரசன், தனக்கு ஒன்றும் தெரியாததுபோல

விதூ— தாங்கள் சொன்னது மிக்க பொருத்தமுடையது.

ஆசிரியர்கள்—' பிரபுவின் மனப்படியே.

அரசன்— மௌத்கல்ய, இங்கு நடந்த செய்தியைத் தெரிவித்துத், தேவியாரைப் பண்டித கௌசிகியாருடன் அழைத்து வா.

---

நடிக்கக் கருதி, அதற்காக இவ்வாறு தாரிணியை வரவழைத்தானென்பது வெளிப்படை. இந்த விஷயத்தில் பலவிதத்தாலும் தாரிணி தடை ஏற்படுத்தாநிராளென்பதை அரசன் நன்கு அறிந்தவன். தாரிணியைத் தன் முன் வரவழைத்துவிட்டால் அவள் சொல்லும் தடைகளை ஸமயம் போலத் தக்கபடி நடந்து நீக்கிவிட முடியும். அந்தப்புரத்திலேயே தாரிணி இருக்க, இங்கு அவளை நேரில் வரவழையாதிருந்து இந்த விஷயத்தைச் சொல்லியனுப்பினல் அங்கிருந்துகொண்டே அவள் கூறும் தடைகளை அரசனல் மறுக்க முடியாது. அங்ஙனமாயின், விதூஷகனுடைய பிரயத்தினங்களெல்லாம் பயன்படாமல் போய்விடும். அங்கு விதூஷகன் போகமுடியாது. அவ்வப்போது ஏற்றபடி பேசி இவ்வாசிரியர்களுடைய கோபத்தீயை மூட்டவும் முடியாது. பண்டித கௌசிகிக்கும் அங்கு அதிகம் வாயிராது. இவையெல்லாவற்றையும் நன்ருக ஆராய்ந்து தான் அரசன் பண்டிதகௌசிகியுடன் தாரிணியை இங்குத்தானே அழைக்கின்ருன். "சித்திரத்திலெழுதிய மாளவிகையைப்பற்றி நான் வினவ, நீ மறுமொழி கூருமலும் என் வார்த்தையைப் பாராட்டாமலுமிருந்தனையே. நான் அவளைக் காணக்கூடாவண்ணம் பெரிதும் காவல் புரிந்தனையே. இப்பொழுது என்ன செய்வாய். உன் முன்பாகவே மாளவிகையை அரங்கத்தில் கொண்டுவந்துவிட்டேன். பார்த்தனையா" என்று தாரிணியை மறைபொருளாக உணர்த்துவதற்காகவே இங்கு அவளை அரசன் அழைக்கின்ருனென்பது ஆழ்ந்த கருத்தெனக் கொள்ளுக. இதுமுதல் மேல்வரும் ஒவ்வொரு வாக்கியமும் ஆழ்ந்த கருத்துடையதாகவின், இனி மனமிருத்தி அபிப்பிராயத்தைச் சிந்திக்கவேண்டும்.

மௌத்கல்ய—அரசன், அப்பொழுது அங்கு வந்திருக்கும் நாட்டியாசாரியர்களுக்கும் கஞ்சுகிக்கும் கூடத் தனது எண்ணம் தெரியக்கூடாதென்று நினைத்து, நடு நிலைமை வஹிப்பவன்போலப் பேசுகின்ருன். "ஓரங்காட்டியதாக தேவி நினைக்கக்கூடும். ஆகையால் தேவியினுடைய முன்னிலையில் தான் இந்த வாது நடப்பது நியாயமானது" என்பது அரசனுடைய வார்த்தை. "நீங்கள் இருவரும் தேவியின்

கஞ்சுகி— கட்டளைப் பிரகாரமே.

(சென்று தேவியுடனும் பிக்குணியுடனும் வந்து)

தேவியார், இவ்வழி வரவேண்டும் இவ்வழி .வரவேண்டும்.

அரசி— (பிக்குணியைப் பார்த்து) பகவதி, ஹரதத்தருக்கும் கணதாஸருக்கும் இப்பொழுது நிகழ்ந்திருக்கும் இந்த வாதினைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள். ?

பிக்குணி— தேவி, தமது கக்ஷி தாழ்ந்து போகுமோ என்ற கவலை வேண்டாம். கணதாஸர் எதிராளிக்கு எள்ளளவும் இளைத்தவரல்லர்.

---

அந்தப்புரத்திற்குப் போய் அங்கு உங்களுடைய திறமையைக் காட்டுங்கள். என்ன முடிவு ஏற்பட்டாலும் அதனை நான் அங்கீகரிக்கின்றேன். இங்கு நடந்தால் ஓரங்காட்டியதாக தேவி நினைப்பாளே தவிர, அங்கு நடந்தாலும் நான் ஓரங்காட்டியதாக நினைக்கமாட்டேன்." என்ற கருத்தும் இவ்வாக்கியத்திற்குப் பொருந்தும். இவ்வாறு மறுகருத்துப் பொருந்தும்படி பேசியது, "ஒரு கால் இக்கருத்தையே கிரஹித்து இவ்விருவரும் அந்தப்புரத்திற்குச்செல்லப்புறப்படுகின்றனரா ? இவர்களுடைய அபிப்பிராயம் தான் என்ன ? " என்று ஆராய்வதுடன் தனது நடுநிலைமையை நடித்துக் காட்டுவதற்காக. அவர்களோ அவ்வாறு புறப்படவில்லை. "தேவரீரே எங்களுடைய ஏற்றத் தாழ்வுகளை ஆராய்ந்து அறுதியிடக் கூடியவர்" என்று முன் சொன்னபடி இன்னமும் அரசனையே முடிவு சொல்பவனாக அவர்கள் விரும்புவதாய் அவர்களுடைய வாக்கியங்களிலிருந்தும் வெளியாயிற்று, ஆகையால் தாரிணியையும் இங்கு வரவழைக்க அரசன் முயன்றதிலிருந்து அவனுடைய நடு நிலைமை நடிப்பு இப்போது உடைந்துவிடவில்லை.

கவலை வேண்டாம்— "நிகழ்ந்திருக்கும் இந்தவாதினைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள் ? " என்ற அரசியினுடைய கேள்வி இவர்களுடைய வெற்றி தோல்விகளை ஆராய்வதிலும் அதற்காகக் கவலைப் படுவதிலும் நோக்கங் கொண்டதல்ல; அதன் கருத்தோ "இவருக்கு இப்போதேற்பட்டிருக்கும் விவாதம் எவராலாவது கிளப்பப்பட்டிருக்குமா, அல்லது வாஸ்தவம் தானா ? இந்த விவாதத்தை நீளவிடாமல் தடுப்பதற்கு வழி என்ன ? அப்படித் தடுத்தால் நின்றுவிடுமா? இதற்குத் தக்க உபாயத்தை நீங்கள் சொல்லுவீர்களா?" என்பதே. அர

அரசி— நீங்கள் சொல்வது உண்மைதான்; ஆயினும் ஹரதத்தர் அரசனைச் சேர்ந்தவராகையால், அவருக்குத்தான் மேம்பாடு கிடைக்கக் கூடியது.

பிக்ஷுணி— அம்மா, நீங்கள் அரசி யென்பதை மறந்துவிட்டீர்களா?. அதனை நினைத்துக்கொள்ளுங்கள். பாருங்கள்.—

---

சியின் இக்கருத்தை கௌசிகி நன்கு அறிவாள். ஆயினும் அவள் அரசியின் கருத்தைத் தழுவி மறுமொழி கூறினால், மாளவிகையை மன்னவன் பார்ப்பதற்காக விதூஷகனும் அவளும் முன் செய்திருக்கும் சூழ்ச்சிகளெல்லாம் சிதறிப் போய்விடுமன்றோ. ஆகையால் கௌசிகி, எடுத்த காரியத்தை நிறைவேற்றக்கருதி, அதற்கேற்றவாறு அரசியினுடைய கேள்விக்குக் கருத்தமைத்து மறுமொழி கூறுகின்றாள்.

நீங்கள்சொல்வது— அரசி அரசனுடைய தன்மையையும் போக்கையும் அறிந்தவளாதலின், சித்திரத்தில் மாளவிகையைக் கண்டு அவன் வினவிய நாள் தொட்டே பெரிதும் கவலைக்காளாயினள். எவ்விதத்திலும் அரசன் மாளவிகையைப் பார்க்கலாகாதென்பதே அரசியின் மனத்தில் புரண்டுழலும் எண்ணம். ஆதலின், மாளவிகையின் ஆசிரியனைப் பற்றிய காரியத்தில் கூட அரசியினுள்ளத்தில் மாளவிகைவிஷயமே முன் வந்து நிற்கின்றது. அது கொண்டு இவள், இந்த விவாதம் காரணமாக ஒருகால் மாளவிகையை எப்படியாவது அரசன் பார்க்க நேரிடுமோவென்று அஞ்சி இச்சண்டையை நிறுத்தவழியுண்டா வென்று கௌசிகியை வினவினள். கௌசிகியோ கேள்வியின் கருத்தையே மாற்றி மறுமொழி கூறிவிட்டாள். அரசிக்குத் தன் கருத்தை கௌசிகி திரித்துப்பேசியது தெரியவந்ததாயினும், அப்பொழுது கௌசிகியிடம் ஸந்தேகங் கொள்ள இடமில்லை. ஆகையால் அரசி, கௌசிகிபோனவழியே போய்த் தனது எண்ணத்தைப் பூர்த்தி செய்ய எண்ணுகின்றாள். "ஹரதத்தர் அரசனைச் சேர்ந்தவராகையால் அவருக்குத் தான் வெற்றி ஏற்படும். நமது கக்ஷி தோற்கும். ஆதலின் இந்த விவாதத்தை வளரவிடாமல் நிறுத்திவிடுவதே உசிதம். அதற்கு நீங்கள் (கௌசிகி) என்னுடன் சேர்ந்து முயற்சி செய்ய வேண்டும்" என்பது அரசியின் கருத்து.

அக்கினி, தன்னைக் கதிரவன் கைக்கொண்டமையால், பெரிதும் ஒளிர்கின்றான். அவ்வாறே சந்திரனும், தன்னை இரவு ஏற்றமையால் ஏற்றம் பெறுகின்றான்.

**விதூஷகன்**— ஓஹோ ஹோ! தேவியார் காமத்துணைவியை முன்னிட்டுக்கொண்டு வருகின்றார்.

---

**அக்கினி**—அரசி சென்ற வழியைப் பின்பற்றிச் சென்றே அவளுடைய கருத்து நிறைவேற முடியாமற் செய்து தனது எண்ணத்தைப் பூர்த்தி செய்யும் பண்டித கௌசிகியின் மதிநுட்பமும் பேசுந்திறமையும் மதிப்பிற்கும் வியப்பிற்குமுரியன. அந்திப் பொழுதில் ஸூரியன் தனது தேஜஸை அக்கினிக்குக் கொடுக்கின்றான் என்று வேதம் கூறும். இக் கருத்து ரகுவம்சத்திலுமுண்டு. மூலத்தில் ஸூரியனைக் குறிக்கும் "பானு"என்ற பதம் ஆண்பாலும்,இரவைக்குறிக்கும் "நிசா"என்ற பதம் பெண்பாலுமாகையால், வடமொழி வழக்குப்படி அப்பதங்களின் பொருள்களையும் ஆண்பாலாகவும் பெண்பாலாகவும் கொள்ளல் வேண்டும். எனவே, ஸூரியனுக்கும் அரசனுக்கும், இரவுக்கும் அரசிக்கும் உவமை பொருந்தக் கூடும். ஸ்திரீயை இரவோடு ஒப்பித்துக் கூறுதல் வால்மீகியின் வழக்கு. இதனை நமது கவியும் அதிகம் கையாளுவதுண்டு. கௌசிகி, ஹரதத்தனை அக்கினிக்கும், கணதாஸனைச் சந்திரனுக்கும் நிகராகக் கூறி, அரசிக்கு ஒருவாறு ஊக்கமுண்டாக்க முயல்கின்றாள். இந்த உவமையால் ஸூரியனுக்கும் ராத்திரிக்கும் பொருத்தமில்லாதது போல அரசனுக்கும் அரசிக்கும் சிறிது மனப்பொருத்தமில்லை என்பது இங்குத் தொனிக்கின்றது.

**ஓ ஹோ ஹோ**— "அவிஹ அவிஹ" என்ற பிராகிருதச் சொல், இடத்திறகேற்றவாறு ஆச்சரியத்தையும் ஸந்தோஷத்தையும், வியஸனத்தையும் குறிக்கும். இங்கு ஸந்தோஷத்தைக் குறிக்கின்றது. "பீடமர்த்திகா" என்ற வடசொல் "காமத்துணைவி" என்று மொழிபெயர்க்கப்பட்டது. பீடமர்த்தனின் இலக்கணம் முன்பே கூறப்பட்டிருக்கின்றது. பெண்பாலாகும்பொழுது பீடமர்த்திகை எனச் சொல்லப்படுகிறது. "கௌசிகி ஒரு ஸன்னியாஸினியாகையால் அவளுக்குப் பீடமர்த்த லக்ஷணம் பொருந்தாது. அவள் அரசியுடனிருப்பதால் இங்குத் துணைவி என்ற பொருளில்தான் அந்தச்சொல் உபயோகிக்கப்பட்டிருக்கின்றது" என்று சிலர் கூறுவர். கௌசிகி பிக்ஷுகியாயிருந்தும், அரசியோடு கூடி கதை பேசுவதையும் தன் விஷயத்தில் உதவியாயிருப்பதையும் நினைத்து விதூஷகன் ஏளனம் செய்கின்றான் என்பது வேறு

*அரசன்*— ஆம்; பார்க்கின்றேன். ?

தேவியார் மங்களகரமான அலங்காரம் செய்துகொண்டு, துறவி வேடம் பூண்ட கௌசிகியாருடன் வருவது, வேதவித்தை உபனிஷத்துடன் கூடி உருவமெடுத்து வருவது போலிருக்கின்றது.

---

சிலரின் கூற்று. தான் அரசனிடம் நடந்து கொள்வதைப்போலக் கௌசிகியும் அரசியிடம் நடந்து கொள்வதாக நினைத்து இவ்வாறு விதூஷகன் பேசியிருக்கலாமென்பது பிறிதொரு சாராரின் கொள்கை. விதூஷகன் பேசும்பொழுது "பீடமர்த்திகை" என்று சொன்னானே அல்லது இன்னாருக்குப்பீடமர்த்திகைஎன்று குறிப்பிடவில்லை. ஆதலால் கௌசிகி அரசன் விஷயத்தில் உதவியாயிருக்க உடன்பட்டதை நினைத்து, விதூஷகன் அவளைக் குறித்து அரசனிடம் இவ்வாறு கூறுவதில் ஒரு குற்றமுமில்லை எனக் கொள்க.

இவ்வாறு அரசியை ஏமாற்றக் கருதி அவள் செல்லும் வழியிலேயே சென்று தனது எண்ணத்தை நிறைவேற்ற நினைத்துத் திறமையுடன் பேசும் கௌசிகியின் பேச்சும், கௌசிகியின் வஞ்சமொழியை அறியாமலும் அவளிடம் ஐயப்பாடுறாமலும் முழு நம்பிக்கையுடனிருக்கும் தாரிணி, பிக்ஷுகி பேசின மார்க்கத்திலேயே சென்று தன் மனோரதத்தைப் பூர்த்திசெய்யலாமென்று எண்ணிப் பேசியும் முடிவில் பயன்படாமற்போன பேச்சும் இங்கு நிறுத்தப் படுகின்றன. ஒருரஸத்தையோ, கதாபாகத்தையோ, பரஸ்பரஸம்பாஷணத்தையோ "இனி நிறுத்தாவிட்டால் நன்றாயிராது" என்று தோன்றும்படியான இடம்வரையில் அழகாய் மேன் மேல் வளர்த்திக் கொண்டுபோய், அந்தவிடத்தில் ஸந்தர்ப்பத்திற்குப் பொருந்த வேறு ரஸம் முதலியவைகளைப் புகவிட்டு முன்னவைகளை மறைத்து அல்லது நிறுத்திவிடுவதில் நமது காளிதாஸருக்கு மாத்திரம் சிறப்பாகவுள்ள ஸாமர்த்தியத்தை அவாது ஒவ்வொரு நாடகத்திலும் உய்த்துணர்வோர் அறியக்கூடும். இந்த ஸந்தர்ப்பமும் அதற்குத் தக்கதோர் உதாஹரணமாக நிற்கின்றது.

மங்களகரமான— குங்குமம் இள அறுகம் புல் முதலியவற்றால் செய்துகொள்ளும் அலங்காரம், மங்களாலங்காரம் எனப்படும். ப்ரவ்ருத்தி தர்மத்திலிருக்கும் அரசியை அத்தர்மத்தைத் தெரிவிக்கும் கர்மகாண்டத்தோடும், நிவ்ருத்திதர்மத்திலுள்ள கௌசிகியை அத்தர்மத்தைப் போதிக்கும் ஞானகாண்டமெனும் உபநிடதத்தோடும் ஒப்பிட்

பிக்குணி— (அரசனை அடுத்துச் சென்று) தாங்கள் ஓங்கி வளருக.

அரசன்— பகவதி, அடிபணிகின்றேன்.

பிக்குணி—

பிரபுவே, மிக்க வலிமை பொருந்திய பிள்ளையைப்பெற்ற வீரத்தாயும், பூமியை யொப்பப் பொறுமையுள்ளவளுமான தாரிணி தேவியையும், சிறந்த டற்பல வஸ்துக்களைப் பயப்பவளும், பொறுமையில் தாரிணி தேவியைப் போன்றவளுமாகிய பூமி தேவியையும் தாங்கள் பல நூற்றாண்டு ஆண்டு வாழ்வீர்களாக.

அரசி— ஐயனே, மேன்மையுடன் வாழ்க.

அரசன்— தேவி, உன் வரவு நல்வரவாகுக. (பிக்குணியைப் பார்த்து) பகவதி, ஆஸனத்தில் அமருக. (எல்லாரும் முறைப்படி உட்கார்ந்தனர்)

---

டுக் கூறுகின்றான். ஞானமில்லாத கர்மமும், கர்மமில்லாத ஞானமும் நன்கு விளங்கமாட்டா என்பதும் இங்கு ஸூசிப்பிக்கப்பட்டது.

ஆண்டு வாழ்வீராக— அரசருக்கு அவனியை மனைவியாகக் கூறுவது வழக்கு. காளிதாஸருக்கு இதில் பெரு நோக்குண்டு. "பரிக்ரஹபஹுத்வேபி" "பூத்வா சிராய" "வஸுமத்யா ஹி ந்ருபா: கலத்ரிண:" என்ற சாகுந்தள ரகுவம்ச சுலோகங்களிலும் வேறு பலவிடங்களிலும் இந்தக் கருத்தைக் காணலாம். இந்த ஆசியில் இரு மனைவிகளைப்பற்றிப் பேசியது, அரசருக்குப் பிறிதொரு மனைவி ஏற்படப்போவதைக் குறிக்கின்றது. "பூமியைப் போலப் பொறுமையுள்ளவள்" என்ற அடைமொழியைக் கௌசிகி தாரிணிக்குக் கொடுத்திருப்பது, "ராஜானோ பஹுவல்லபா:—அரசர்கள் அனேக மனைவிகளையுடையவர்கள் என்றபடி இராவதியைப் போல் மற்றொரு மனைவி இருந்தாலும் நமக்கென்ன" என்று நினைத்துத் தாரிணி பொறுமையுடனிருப்பதற்காகவும், இனித் தான் செய்யப்போகும் காரியம் தாரிணிக்குக் கோபத்தை மூட்டக்கூடியதாகவிருக்குமாகையால் அவ்விஷயத்தில் தன்னை பொறுத்துக் கொள்வதற்குள்ள மனநிலைமையை அவள் அடைவதற்காகவும் அடையப் பாடுபடுவதற்காகவுமேயாம். இஃது அவ்வாறே தாரிணிவிஷயத்தில் பயன்படுவதை வருங் காரியத்தில் காணலாம்.

**அரசன்**— பகவதி, ஆன்றோராகிய ஹரதத்த கணதாஸரிருவரிடையில் கல்விப்பொறாமை ஏற்பட்டிருக்கின்றது. ஆதலின் இந்த விஷயத்தில் தாங்கள், ஆய்ந்து பார்த்து முடிவு கூறும் ஸ்தானத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

**பிக்குணி**— (புன்னகையுடன்) வீணாக என்னை உயர்த்திக் கூறி ஏளனஞ் செய்யவேண்டாம், பட்டணமிருக்க, கிராமத்திலா இரத்தினப்பரீக்ஷை செய்வது ?.

**அரசன்**— அவ்வாறன்று, அவ்வாறன்று. தாங்கள் பண்டித கௌசிகியாரல்லவோ. நானும் தேவியாரும் இவ்விஷயத்தில் ஓரம் பேசக்கூடியவர்களே.

---

ஆன்றோராகிய— கௌசிகி மத்தியஸ்தையாயிருந்தால் மட்டுமே அரசனது எண்ணம் எளிதில் நிறைவேறும். ஆகையால் அரசன், அவர்கள் வந்ததும் வேறு வார்த்தையைப் பேசி விளம்பம் செய்யாமல், கௌசிகிக்குப் பரீக்ஷாதிகாரிஸ்தானத்தைக் கொடுக்கின்றான்.

கிராமத்திலா—மத்தியஸ்தையாயிருக்கத் தனக்கு மனமார எண்ணமிருப்பினும், பிரியமில்லாதவளைப்போல நடிக்கின்றாள். இரத்தினப்பரீக்ஷை—இங்கும் கன்யாரத்நபரீக்ஷை தான்.

அவ்வாறன்று—கௌசிகியை நிர்ணயாதிகாரத்தில் வைப்பதற்கு, "தாங்கள் பண்டித கௌசிகியாரன்றோ" என்று அரசன் பேசுவதில் குற்றமொன்றுமில்லை. அதோடு நிற்காமல் "நானும் தேவியாரும் இவ்விஷயத்தில் ஓரம் பேசக்கூடியவர்களே" என்று அரசியையும் சேர்த்துப் பேசியதின் கருத்தென்னை ? இது கருத்தாம்—பிக்குணி "பரிஹஸிக்கலாகாது. பட்டணமிருக்கக் கிராமத்திலா இரத்தினப் பரீக்ஷை செய்வது" என்றுபேசியதில் அரசனையோ அரசியையோ குறிப்பிடவில்லை. பொதுவாகவே பேசியிருக்கின்றாள். அவள் தன்னைக் கிராமத்திற்கொப்பிட்டுக்கொண்டதாக நாம் நிச்சயிக்கலாமாயினும், பட்டணத்திற்கொப்பாக அவள் யாரைக்கருதுகின்றாள் என்பது நன்கு வெளியாகவில்லை. அரசனோடுசொல்வதாலும் முன்னேற்பாட்டினாலும் அவனையே அவ்வாறு கருதியிருக்கவேண்டும். ஆயினும், அவள் அதனை வெளிப்படையாகச்சொல்லாதது, அரசியையும் குறிப்பிட்டதுபோலக் காட்டித், தான் நடுநிலைமையள் என நடிப்பதற்காகவே. அரசனோ தனது முழுக் கவலையையும் மாளவிகைவிஷயத்தில் செலுத்தியிருக்கின்றான். ஆதலின், பிக்குணியின் பொதுவான மொழியைக் கேட்டவுடன், "ஒருகால் அரசி

**ஆசிரியர்கள்**— தேவ, தேவரீர் பொருந்துமாறு புகன்றீர்கள். பகவதியாரே நடுநிலைமையில் நின்று எங்களுடைய குணதோஷங்களை அளந்து கூறுவாராக.

**அரசன்**— ஆயின், வாது தொடங்கலாமே.

**பிக்குணி**— தேவ, நாட்டிய சாஸ்திரம் அபினயத்தையன்றோ தலைமையாகக் கொண்டது. இதில் வாய்ச் சண்டைக்கு இடமில்லையே ?.

**அரசன்**— தேவி, உன் கருத்து என்ன ?

---

யே தானாக அந்த மத்தியஸ்தபதத்தை ஏற்றுவிடுவாளோ" என்ற பயமும் அவ்வதிகாரத்தை அரசியே ஏற்றுக்கொண்டால் முதலில் ஹரதத்தனைப் புகவிட்டோ வேறு ஏதாவதொரு தந்திரம் செய்தோ மாளவிகையை வரவிடாமல் தடைசெய்யக் கூடுமென்ற கவலையும் அவனைப் பிடித்துக்கொண்டன. ஆகையால், பிக்ஷுகி பேசியவுடன், அரசன், தானும் அரசியும் அர்தஸ்தானத்தை வகிக்கத் தகுதியுடையவர்களல்லர் என்று அரசியையும் சேர்த்துக்கொண்டு விரைந்து பேசுகின்றான்.

புகன்றீர்கள்— ஆசிரியர் இருவருள்ளமும் பொறாமைக்கும் கோபத்திற்கும் ஈடுபட்டுவிட்டமையால் இவ்விருவரும் ஆய்ந்துநோக்கும் சக்தியை அடியோடிழந்து, விதூஷகனோ அரசனோ யார் எதைச்சொன்னாலும் ஆம் ஆம் என்று தலையாட்டிப் பதுமைகளாக நிற்கின்றார்கள். கற்றும் அறிவிலிகளான இவர்களுடைய ஏழைமை இரங்கற்பாலது.

தொடங்கலாமே—முன்னேற்பாட்டுப் பிரகாரம் இவ்விருவருடைய வாய்ச்சண்டையை அரசன் விரும்பாவிடினும், நடு நிலைமையை நடிப்பதற்காகவும், முன்செய்திருக்கும் ஸங்கேதப்படி மாளவிகையை அரங்கத்திற்கழைக்க வழி உண்டுபண்ணுவதற்காகவும் இவ்வாறு பேசுகிறான்.

இடமில்லையே— பிக்குணி எத்துணை அழகாகத் தனது காரியத்தில் இறங்குகின்றாளென்பதைக் காண்க.

உன் கருத்து என்ன— என்னே அரசனது தந்திரம் ! பிக்குணி சொல்வதைத் தான் ஏற்றுக்கொள்ளாதவன்போலப் பேசுகின்றான். "பிக்குணி அவ்வாறு கூறுகின்றாள். எனக்கு அது பிடிக்கவில்லை. உனது அபிப்பிராயம் என்ன ? இவர்களைச் சாஸ்திரத்தில் மட்டும் பரீக்ஷிப்பது போதாதா ? பிரயோகத்தில் ஏன் பரிக்ஷிக்கவேண்டும்" என்ற கருத்தும் அரசன் வாக்கியத்திற்குப் பொருந்துமன்றோ. இக்கருத்

*அரசி*— என்னைக் கேட்பதானால், இவர்களுடைய விவாதமே எனக்குப் பிடிக்கவில்லை.

**கணதாஸன்**— தேவி, ஒரே வித்தையிற் பயின்ற எதிராளியிடமிருந்து நான் அவமதிப்பை அடையும்படி விடுவது தங்களுக்குத் தகாது.

---

தையே தழுவி அரசியும் ஒரு தடை சொல்லிவிட்டால் மேல் நடக்க வேண்டிய காரியம் சிதறுண்டுபோகாதோவெனின், போகாது—ஆசிரியர்களுடைய ஸ்வபாவத்தையும், விதூஷகனுடைய ஏற்பாட்டையும் கௌசிகியின் புத்திசாதுர்யத்தையும் அரசன் அறிந்தவனாகையால், இனி தேவி என்ன தடைசெய்தாலும் இவ்வாது நிற்காதென்பது அரசனது துணிபு. "ஐயோ, இவ்வாறு நிகழ்ந்து விட்டதே. செய்வதென்? மாளவிகையையும் வரவழைப்பார்களோ" என்று மனமுடைந்து கவன்று வருந்தும் அரசியைப்பார்த்து, புண்ணில் கோலிட்டாற்போல இவ்வாறு அரசன் பேசுவது, சித்திரத்தில் மாளவிகையைக் கண்டு வினவியதற்கு மறுமொழி கூறாமல் தன்னைப் புறக்கணித்த அவளை ஸூசனமாக ஏசக் கருதியேயாம்.

பிடிக்கவில்லை—அரசன் வேறு கருத்துப்பட பேசியதையே அங்கீகரித்து இவ்வாறு அரசி சொல்லுகின்றாள். "வாய்ச்சண்டை வேண்டாம். அபினயம் வேண்டும் என்று பிக்குணியார் கருதுகின்றார். தாங்களோ அபினயம் வேண்டாமென அபிப்பிராயப்படுகிறதாகத் தெரியவருகிறது. நானோ இரண்டும் வேண்டாமென நினைக்கின்றேன்." என்பது அரசியது வாக்கியத்தின் கருத்து.

வித்தையில்—மிக்க படிப்பாளியும் கிழவனும் தனது சக்தியில் நம்பிக்கையுள்ளவனுமான கணதாஸன், எங்கு வாது நின்றுவிடுமோ என்று கவலையுற்று எப்படியாவது வாது நடத்தித் தனது வல்லமையைக் காட்டி வெற்றி பெறவேண்டுமென்ற பேரவாவினால் தூண்டப்பட்டவனாய் இவ்வாறு புகல்கின்றான். 'பிக்குணியாரும் அரசரும் உடன்படத் தாங்கள்மாத்திரம் எதிராயிருக்கலாகாதென்கிறான். ஹரதத்தனுடைய மிக்க இழிந்த சொல், இவன் மனத்தை அறுக்கின்றது. "ஸமானவித்யத:" என்பது பாடம். "அஸமானவித்யத:" என்று பாடமானால் "தேவி, வித்தையில் எனக்கு நிகரல்லாத எதிராளியிடமிருந்து நான் அவமானத்தை அடையும்படி தாங்கள் விடலாகாது" எனப் பொருள் கொள்க.

**விதூஷகன்**— நடக்கட்டுமே. ஆட்டுக் கடாச் சண்டையைப் பார்ப்போமே. வீணாக ஊதியம் கொடுப்பதில் பயன் என்ன.

**அரசி**— சும்மாவிரு. சண்டை மூட்டுவதுதான் உனக்குப் பிடித்த காரியம்.

**விதூஷகன்**— அவ்வாறன்று. மதம் பிடித்த இரு யானைகள் ஒன்றோடொன்று போர் தொடங்கினால், அவைகளுள் ஒன்று தோல்வியுறாத வரையில் சண்டை அடங்குமோ?.

**அரசன்**— பகவதி, இவரிருவரும், தமது அவயவங்களை அழகு பொருந்த ஏற்றவாறு உபயோகித்து அபினயிப்பதைத் தாங்கள் பார்த்திருக்கக் கூடுமே?.

---

ஆட்டுக்கடாச்சண்டையை— இதனைப் பார்த்தவர்களுக்கு மாத்திரமே, அக்கடாக்களின் வல்லமையும் ரோஷமும் ஊக்கமும் தெரியவரும். ஒன்று தோற்காதவரையில் அவைகளுடைய சண்டையும் ஓயாது. இங்குத் தக்க ஸமயம் பார்த்து விதூஷகன் சண்டையைக் கிளப்பிவிடுகிறான். அரசி பேசிய பிறகு கணதாஸனுடைய மன நிலைமை எப்படியிருக்கின்றது என்பதைக் கண்டறிந்த பின்பே தான் பேசவேண்டுமென்றிருந்த விதூஷகன், கணதாஸனுடைய மனவெழுச்சி குறையவில்லை என்பதை அறிந்தவுடன் தக்கவாறு பேசுகின்றான். "வீணாக ஊதியம் கொடுப்பதில் பயன் என்ன ?" என்பது அவ்விருவருடைய உள்ளத்திலும் ஊடுருவிப்பாயாமலிராது.

சும்மா விரு— இதுமுதல் தான் அரசியின் மனத்தில் ஒரு ஐயப்பாடு உதிக்கின்றது. விதூஷகன் ஏதோ தந்திரமொன்று செய்திருக்கின்றான் என நினைத்து அவனை அடக்க முயல்கின்றாள்.

மதம்பிடித்த— அரசி தன்னிடம் ஸம்சயங்கொண்டிருப்பதையும் வெறுப்பதையும் குறிப்பாலுணர்ந்த விதூஷகன், "இனிமறைவில் நிற்பதில் பயனில்லை" என்று நினைத்துப் பயமின்றி வெளிப்படையாகவே தக்கதோருவமைமூலம் சண்டையை மூட்டிவிடுகின்றான். முன்பு ஆசிரியர்களை ஆட்டுக் கடாக்களாகச் சொன்னதில், அவர்களுக்குத்தோன்றக்கூடிய அருவருப்பைக் கருதி அதற்குப் பரிஹாரமாம்படி இங்கு அவர்களை யானைகளாகக் கூறினனெனக் கொள்க.

பார்த்திருக்கக் கூடுமே—அரசியின் அபிப்பிராயத்தைப் பின்பற்றுகிறவன்போலப் பேசுகிறான். "எனக்கோ அபினயத்தைப் பரீக்ஷைசெ

**பிக்குணி**— ஆம். பார்த்திருக்கின்றேன்.

**அரசன்**— என்வே, அதைக்காட்டிலும் மேலாக இவர்கள், தங்களது தகைமையை உணர்த்த இப்பொழுது காட்ட வேண்டியது என்ன?

**பிக்குணி**— அதனைத் தான் சொல்ல விரும்புகின்றேன்.

ஒருவனுக்குக் கல்வித்திறமை நன்கமைந்திருக்கலாம். வேறொருவனுக்குக் கற்பிக்கும் திறமை சிறப்புற்றிருக்கலாம். எவனுக்கு இந்த இரு திறமைகளும் நன்கு பொருந்தியிருக்கின்றனவோ, அவனே ஆசிரியர்களின் முன்னணியில் அமரத் தகுந்தவன்.

---

ய்ய மனமில்லை. தாங்களோ வாக்குவாதத்திற்கு இடமில்லையெனக்கூறிவிட்டீர்கள். அரசியோ இந்த வாதினையே நிறுத்திவிட விரும்புகின்றாள். ஆசிரியர்களோ தங்களுக்குள் வெற்றிதோல்விகளை அறிய விரும்புகின்றனர். நானும் அரசியும் ஆசிரியர்களும் உடன்பட்டுத் தங்களையே மத்தியஸ்தஸ்தானத்திலிருந்து நிர்ணயம் சொல்லுமாறு ஏற்படுத்திவிட்டோம். தாங்களும் அதனை ஏற்றுக்கொண்டமையால் தங்களுடைய முடிவைத்தான் இவ்விஷயம் சார்ந்து நிற்கின்றது. தாங்களோ அபினயத்தைக் கொண்டே முடிவு செய்ய விரும்புகின்றீர்கள். இவர்களுடைய அபினயசாதுர்யத்தை முன்பே தாங்கள் பார்த்திருக்கலாம்: அதனைக்கொண்டே ஒரு முடிவு சொல்லத் தடை என்ன? தேவி கூறுவதுபோல வீண் சண்டை வேண்டாம் எனக்கும் பிடிக்கவில்லை. தாங்கள் ஒரு முடிவு கூறுதவரையில் இவ்விரு ஆசிரியர்களும் சண்டையை நிறுத்தமாட்டார்கள். ஆகையால் தான் இவ்வாறு நான் கூறுகின்றேன்" என்பது அரசன் வாக்கியத்திற்குப் போலிக் கருத்து. முன் முடிவு கட்டியிருக்கிறபடி மாளவிகையை வரவழைப்பதற்குள்ள வழியைச் சீராக்கத் தொடங்குகின்றான் அரசன் என உண்மையிற் கொள்க.

எனவே—முன்வாக்கியத்திற்கு நாம் எழுதியிருக்கும் கருத்தையே கொண்டது இவ்வாக்கியம்.

ஒருவனுக்கு— எல்லாருக்கும் ஒப்ப முடியுமாறு ஆசிரியரது இலக்கணம் கூறி, இவ்வழியில் மாளவிகையை அரங்கத்திற்கு இழுக்க நினைத்துப் பேசும் பிக்குணியின் மதிநுட்பம் போற்றற்பாலது.

**விதூஷகன்**— ஆரியர்களே, பகவதியின் வார்த்தையைச்செவியுற்றீர்களா?. கற்பிக்குந் திறமையைக்கொண்டுதான் முடிவு சொல்லவேண்டுமென்பது அந்த மொழியினது திரண்ட பொருள்.

**ஹரதத்தன்**— இஃது எங்களுக்குப் பெரிதும் ஏற்றதே.

**கணதாஸன்**— தேவி, இவ்வாறு வந்து நிற்கின்றது.

---

ஆரியர்களே— விதூஷகன், தனது தந்திரம் தக்கபடி பயன்படத்தொடங்கியதைக் கண்டு மகிழ்ந்து தன்னைத்தானறியாமல், பிக்ஷுணி கூறிய ஒவ்வொருமொழிக்குத்தான் சுருக்கத்தில் ஒரு வியாக்கியானம் செய்து அவளது பொதுமொழியை இவ்விருவரிடமும் பொருத்திப் பேசுகின்றான். அரசியின் எதிரில் விதூஷகன் இவ்வாறு முன்வந்து பேசுவதற்கு, முன் கூறியபடி அச்சம் நீங்கியதும், அகமகிழ்ச்சியுமே காரணங்களாம். மேலும் விதூஷகனே பிரமுகனாக நின்று பேசுவதைக் காண்க.

ஏற்றதே— கல்வித்திறமையில் ஒருகால் கிழவனாகிய கணதாஸனை வெல்லமுடியாமற்போகலாம். கற்பிக்குந் திறமையையன்றோ பரீக்ஷைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் மாணாக்கர் மூலமல்லவா நடத்தவேண்டும். கணதாஸனுடைய மாணாக்கியோ ஸமீபத்தில்தான் கற்கத்தொடங்கியவள். ஆகையால் இந்த விஷயத்தில் தனக்கு வெற்றி கிடைக்குமென்று உறுதிகொண்டே ஹரதத்தன், மனமகிழ்ச்சியுடன் உடனே இதனை ஒப்புகிறான்.

வந்து நிற்கின்றது— நாட்டியாசாரியரிருவருள் வயது முதிர்ந்த கணதாஸனை அரசி ஏற்று ஊதியம் கொடுத்து வருகிறாள். இவனிடம் அரசிக்குப் பூர்ணமான நம்பிக்கையுண்டு. மாளவிகையை அரசன் காணுமாறு இடந்தரலாகாது என்று இவனிடம் அரசி முன்பே சொல்லியிருக்கவேண்டும். அரசன் சித்திரத்தில் மாளவிகையைக் கண்டபின்பு, இதனையே வற்புறுத்தியுமிருக்கவேண்டும். இவ்வாறிருக்க, இப்பொழுது அரசியின் முன்னிலையிலேயே அரசன் மாளவிகையைக் காணும்படி வந்து விட்டதே என்றும், இதற்கு நானே காரணமாயிருந்தேனே என்றும் எண்ணி ஏங்கிக் கணதாஸன் இவ்வண்ணம் அரசியிடம் தெரிவிக்கின்றான். "இந்த வாது இவ்வாறு முடிவுறுமென்று தெரியாமல் தொடங்கிவிட்டேன். இப்பொழுது நான் செய்வது என்ன?" என்பது கருத்து. இவ்விதம் கணதாஸன் வருந்துவதால் தான், மாளவி

**அரசி**— மாணாக்கி ஒருகால் புத்தி குறைந்தவளாயிருந்து, கற்பித்ததைப் பழுதுபடச் செய்தால், அஃது ஆசிரியரது குற்றமாகுமோ ?.

**அரசன்**— தேவி, இது பொருந்தும்.

**கணதாஸன்**— ஆசிரியன் தகுதியற்ற பாத்திரத்தைக் கைக்கொண்டால், அஃது அவனது புத்திக் குறைவையே எடுத்துக்காட்டும்

---

ங்கயின் புத்தி கூர்மையால் தனக்கே வெற்றி கிடைக்குமென்று அவனுக்கு நிச்சய மிருந்தபோதிலும், கௌசிகியும் விதூஷகனும் கூறிய வார்த்தைகளுக்கு முன்போல முன்வந்து மறுமொழி கூறவில்லை.

குற்றமாகுமோ— ஆகாது. ஆகையால் இப்பொழுது இவர்களது கற்பிக்குந்திறமையை மாணாக்கர்வழியாக ஆராய்வது தகாது. ஏனவே ஒன்று வாதினையே நிறுத்துக; அல்லது இவர்களையே பலவகையிலும் பரீக்ஷைசெய்து முடிவு கூறுக என்பது கருத்து. என்னே ! அரசியின் புத்திசாதுரியம்.

பொருந்தும்— அரசனது இவ்வாக்கியம் இருவகையில் பொருந்தும்— " அரசி சொல்வது உண்மை. மாணாக்கர் மூலம் ஆராயக்கூடாது தான் " என்று அரசியின் கருத்தைத் தழுவியதாக இதற்குக் கருத்துக் கூறலாம். " குற்றமாகுமோ " என்று அரசி கூறியவுடன் " இது பொருந்தும் " என்று சொல்லியிருப்பதால் " அரசி கூறியபடி குற்றமாகாதிராது. குற்றம் தான் " எனவும் இவ்வாக்கியம் கருத்துக்கொள்ளும். இவ்வாறு இரு கருத்துப்பட அரசன் கூறியது தனது நடுநிலைமை நடிப்பினை வெளிப்படையாக உடைக்காமலிருப்பதற்காகவே.

எடுத்துக்காட்டும்— ஐயோ பாவம். கணதாஸன் கபடமற்றவன். இவனுக்கு வெளுத்ததெல்லாம் பால். அரசன் வாக்கியத்திற்கு முற்கூறிய இரண்டாம் கருத்தையே கணதாஸன் கைக்கொண்டான். அது பற்றி வெகுண்டான். இங்குக் கணதாஸன் கூறிய வார்த்தையை அரசனே கூறியதாகச் சேர்த்துள்ள ஒரு பாடமுண்டு. அஃது அரசனின் இப்போதைய நடுநிலைமை நடிப்பிற்குப் பொருந்தாது. இவ்வாறே அரசனது வாக்கியத்தில் " ஏவம் ஆபத்யதே " என்ற பாடமும் பொருந்தாது. " இவ்வாறுதான் ஆகும் " என்றல்லவோ அதன் பொருள். அவ்வாறாயின் அஃது அரசியின் கருத்தைத் தழுவாமல் பேசியது போன்றதாகுமல்லவா?.

**அரசி**— (மனத்துள்) இனி எப்படி?. எவ்வாருயினும், அரசருக்கு மனவெழுச்சியைத் தரும் அவரது இவ்வெண்ணத்தை நிறைவேற்றலாகாது. (கணதாஸனைப் பார்த்து வெளிப்படையாக) பயனில்லாத இக்காரியத்திலிருந்து ஒழிவடைக.

**விதூஷகன்**— தேவி, நீங்கள் சொல்வது நல்லது. ஏ கணதாஸரே, ஸங்கீதம் கற்பிக்கத் தொடங்கிய நாள் முதற்கொண்டு வாணிதேவிக்கு வழிபாடாக வைக்கும் மோதகங்களைக் கடித்துத் தின்று காலம் கடத்திவரும் நீர், தோல்வி எளிதில் ஏற்படக் கூடிய இந்த வாதுக்கு ஏன் வருகின்றீர்?.

---

இனி எப்படி— இதுமுதல் "நிறைவேற்றலாகாது" என்பதுவரை அரசியின் மனத்துள் மொழி. "(மனத்துள்) இனி எப்படி?. (கணதாஸனைப் பார்த்து, ரகஸியமாக) அரசருக்கு......லாகாது. (வெளிப்படையாக) பயனில்லாத இக் காரியத்திலிருந்து ஒழிவடைக." என்ற பொருள்கொண்ட ஒருபாடமும், "(மனத்துள்) இனி எப்படி?. (வெளிப்படையாக) ஆரிய புத்திரருக்கு (அரசருக்கு) ...... ஒழிவடைக." என்ற மற்ருெரு பாடமும் காணப்படுகின்றன. அரசன் முதலியவர் முன்பில் அரசி கணதாஸனோடு ஏகாந்தமாகப் பேசுவது கூடாதாகையால் முதலில் காட்டிய பாடம் நன்றன்று. இரண்டாம் பாடமோ அடியோடு பொருந்தாதென்பது வெளிப்படை.

**நீங்கள் சொல்வது**— "ஸங்கீதாபதேசேந" என்று பாடாந்தரமுண்டு. "ஸங்கீதமெனும் வியாஜத்தால்" என்பது அதன்பொருள். மோதகமென்பது கொழுக்கட்டைஎன வழங்கும் தின்பொருள் என்பர். விதூஷகன், இவ்விருவருடைய சண்டையை வளர்த்தவும், கணதாஸனுக்குக் கோபத்தை மூட்டவும் வெளிப்படையாகவே துணிந்துவிட்டான். காரணம் முற்கூறியதேயாம். "நிரர்த்தகாத்" என்பது அரசி வாக்கியத்திலுள்ள வடசொல். இதற்கு "இனி வரும் பிரயோஜமொன்றுமில்லாத" என்றும், "இதுவரை இருந்து வரும் பயன் போகக்கூடிய" என்றும் பொருள் கூறலாம். "விரும்பிய பலனை அளியாமல் விபரீத பலத்தைக் கொடுக்கக் கூடிய;" என்ற பொருளும் இதினின்று பெறலாம். எனவே விதூஷகன் இங்கு இம் மூன்றனையும் காட்டுகின்ருன். "மோதகங்கள் முன்பே கிடைக்கின்றமையால் இனி வரக் கூடிய பயனென்றுமில்லை. தோற்ருலோ கிடைத்துக் கொண்டிருந்த மோதகங்களை இழக்க நேரிடும். வெற்றியைப் பயனாகக் கருதிப்புறப்பட, மாருகத்

**கணதாஸன்**— ஆம். உண்மை. தேவி பேசுவதின் கருத்தும் இதுவே. ஆதலின் இப்பொழுதுக்கேற்றதொரு வார்த்தை சொல்லுகின்றேன். கேட்கவேண்டும்.

எவனொருவன், "நான் பதமும் புகழும் பெற்றிருக்கின்றேன்" என்று எண்ணி வாதுக்கு அஞ்சி எதிராளி செய்யும் இழிவினைப் பொறுத்துக்கொண்டு தனது சாஸ்திரப் பயிற்சியை வெறும் பிழைப்பிற்கு மாத்திரம் உபயோகிக்கின்றானோ, அவனைப் பெரியார் அறிவினை விற்கும் செட்டி எனப் பேசுகின்றனர்.

**அரசி**— ஐயா, உம்முடைய மாணாக்கி சிறிது காலத்திற்கு முன்புதான் கல்வி கற்க விடப்பட்டாள். ஆகையால் அவளது பயிற்சி நிலைபெறாதிருக்க, அதனைக் காட்டச் செய்வது அடுத்ததன்று.

**கணதாஸன்**— இதனால் தான் நான் வற்புறுத்துவதும்.

---

தோல்வி ஏற்படலாம்." என்று இவ்வாக்கியத்துக்குக் கருத்துக் கூற வேண்டும். உன் திறமைக்கு மோதகங்களே ஊதியம் என்று ஏளனமாகப் பேசிக் கணதாஸனது வஞ்சமறியா நெஞ்சில் கோபத்தீயை மூட்டுகிறான் விதூஷகன். "பயனில்லாத" என்னும் சொல்லை, "பயன் இல்லாத" என்றும், "பயன் நில்லாத" என்றும் பிரித்து முற்காட்டிய பொருள்களைக் கொள்ளல் வேண்டும்.

ஆம். உண்மை— கணதாஸனது மனவெண்மை இங்கு இரங்கற்பாலது.

அடுத்ததன்று— அரசி "பயனில்லாத இக்காரியத்திலிருந்து ஒழிக". என்று நேர்மையுடன் சொன்னதற்கு விதூஷகன் வேறு கருத்தமைத்துக் கணதாஸனைக் கிளப்பிவிட்டான். அவனும் அவ்வாறே கிளம்பினான். அந்தோ, அரசியின் நிலைமை எளியதாகிவிட்டது. ஆயினும் புத்திமதியான அரசி ஊக்கத்தை விடாமல், ஆசிரியனுக்குக் கோபம் வரவோ விதூஷகன் சிரித்துப்பேசவோ இடமில்லாதபடி தனது எண்ணத்தை நிறைவேற்றக் கருதி, நன்கு பொருந்தும் தடையொன்றைச் சொல்லுகின்றாள்.

இதனால் தான்— "சிறிது காலத்திற்குள்ளேயே இவ்வாறு கற்பித்திருக்கிறான்" என்று தன்னைப் புகழ்ந்துரைப்பார்களென்றும், தன

**அரசி**— அப்படியானால், நீங்களிருவரும் உங்களுடைய கற்பிக்குந் திறமையைப் பகவதியிடம் காட்டுங்கள்.

**பிக்குணி**— தேவி, இஃது உசிதமன்று. எல்லாமறிந்தவனாயினும் ஒருவன் தனித்து ஒரு காரியத்தை முடிவுசெய்வது குற்றமேயாம்.

**அரசி**— (மனத்துள்) அறிவிலி, பிக்குணி, நான் விழித்துக்கொ

---

க்கு வெற்றி கிடைக்காமலிராதென்றும் கணதாஸன் கருதுகின்றான். மாளவிகையின் ஸாமர்த்தியத்தை நன்றாயறிந்தவனாதலின், இவ்வாறு நம்புகின்றான்.

அப்படியானால்— என்ன சொல்லியும் கணதாஸனது பிடிவாதம் போகிறதாகத் தெரியவில்லை. என்ன தடை சொன்னாலும், தக்கதோ தகாததோ மறுமொழியொன்று கூறிவிடுகின்றான். இவன் வாதிற்கு நிற்காமல் திரும்பமாட்டான் என்பதைக் கண்டறிந்த அரசி, "இனி வாதினை நிறுத்தப் பிரயத்தினப் படுவதில் பயனில்லை. அரசன் மாளவிகையைப் பார்க்கலாகாதென்ற நம்மெண்ணத்தை வேறு விதமாகவே நிறைவேற்றவேண்டும்" என்று நினைத்துப் புதியதொரு வழி எடுக்கின்றாள். பகவதியிடம் காட்டுவதாக நிச்சயித்தால், பகவதி தனித்திருக்குமிடத்திற்குச் சென்றோ, தானும் கூடவிருக்கக்கூடிய அந்தப்புரத்திற்கு வந்தோ காட்டும்படி ஏற்பாடு செய்துவிடலாம். அல்லது இவ்விடத்திலேயே பிக்குணியை மாத்திரம் நிறுத்திவிட்டுத் தானும் அரசனும் போய்விட ஏற்பாடு செய்துவிடலாம். எனவே, மாளவிகையை அரசன் காணமுடியாதபடி செய்தல் எளிது என்பது அரசியின் கருத்து.

உசிதமன்று— "ஒருவன் தனித்து முடிவுசெய்யக் கூடாதாகையால், நான் மாத்திரம் பரீக்ஷை செய்யலாகாது. உங்களிருவருள் ஒருவரைச் சேர்த்துக்கொள்ளலாமென்றாலோ, ஒவ்வொருவரும் ஒவ்வொருகக்ஷியைச் சார்ந்தவராதலின் மற்றவர்க்கு ஸம்சயம் உண்டாகக்கூடும். ஆகையால் இப்பொழுதிருக்கிறபடி நம்மூவர்களுடையவும் முன்பில்தான் பரீக்ஷை நடக்கவேண்டும்." என்னும் கருத்துப்பட பிக்குணி பேசுகின்றாள்.

அறிவிலி— "எனது கபடத்தை அரசி அறியமாட்டான் என்று நினைத்தாயல்லவா. இஃது உனது அறியாமையன்றோ. பிக்குணியான நீ இவ்வாறு காம விஷயத்தில் அரசனுக்குத் துணையாயிருப்பது

ண்டிருக்கும்பொழுதே, என்னைத் தாங்குகிறவளாக நினைத்து நடக்கின்றாய்.

(வெறுப்புடன் முகத்தைத் திருப்புகின்றாள். அரசன் அரசியைப் பிக்ஷுணிக்குக் காட்டுகின்றான்.)

**பிக்குணி**—(பார்த்து)ஏ மதிமுகி, நீங்கள் மேன்மை பொருந்திய அரசர் பக்கமிருந்து, காரணமின்றி ஏன் முகத்தைத் திருப்ப வேண்டும்?. நற்குடி மகளிர், தங்களுடைய கணவர்களிடம் எவ்வளவு செல்வாக்குள்ளவர்களாயிருந்தபோதிலும், காரண மிருந்தால்மட்டுமே அவர்களிடம் கோபங்கொள்வார்கள்.

**விதூஷகன்**— காரணத்தோடு கூடியே. தனது கக்ஷியைக்

---

தருமா?" என்பது அரசியின் கருத்து. கௌசிகியின் நடக்கையால் முன்பு அவளிடம் அரசிக்கு முளைத்த ஸம்சயம் இப்போது வேரூன்றலாயிற்று. "ஏ பிக்குணி, நீ என்னை ஏமாற்றக் கருதுகின்றாய். உனது வஞ்சத்தில் நான் அகப்படேன். நான் விழிப்புடனிருக்கின்றமையால் தக்கபடி மேலும் தடைகளைச் செய்யாதுவிடேன்." என்று அரசி மனத்துள் நினைக்கின்றாள். இவ்வார்த்தையை ஏகாந்தமாக அரசி சொல்லியதாய்ச் சில புஸ்தகங்களில் பாடம் காணப்படுகின்றது. ஏகாந்தமாக அரசி எவருடன் பேசினாள்? என்பது தெரியவில்லை. பிக்குணியுடனோ, இருக்கமுடியாது. ஸபையில் இவ்வாறு வெளிப்படையாய்ப்பேசுவதும், "அறிவிலி" என்று பிக்குணியை விளிப்பதும் அரசிக்குத் தகாதனவன்றோ.

மதிமுகி— அரசிக்கு இப்போது கோபம் உண்மையில் தன் மீதுதானென்பதை அறிந்தவளாயினும், கௌசிகி, அதனை மறைத்து, அரசனிடமுள்ளதாகப் பேசி, அதனைத் தணிப்பவள்போல நடிக்கின்றாள். உண்மையை மறைக்காமல் ஒப்பினால் கௌசிகிக்குப் பேச வாயிராது. "உனது முகமாகிய சந்திரனைக் கோபமென்னும் ராகு பிடிக்கலாகாது" என்ற கருத்தில் "மதிமுகி" என்ற பதம் நிற்கின்றது. "அபர்வணி க்ராஹ கலுஷேந்துமண்டலா..........." என்று நான்காமங்கத்தில் இவ்வித ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

காரணத்தோடுகூடியே—அரசியின் கோபத்திற்கு அஞ்சிக் கணதாஸன் ஒருகால் அடங்கிவிடுவானோ என்று கவலையடைந்த விதூஷகன் கணதாஸனைக் கிளப்பிவிட, கொடும் விஷச்சொற்களைக் கக்குகின்றான்.

காப்பாற்றவேண்டுமென்பதுதான் காரணம். (கணதாஸனைப் பார்த்து) கணதாஸரே, கோபத்தைக் காட்டி தேவியார் உம்மைக் காப்பாற்றிவிட்டார். இஃது உமது பாக்கியமே. ஆமாம். எத்துணை சிறப்பாகத் தாம் கற்றிருந்தபோதிலும், கற்பிப்பதில் தேர்ச்சி பெறவும், அதனை வெளிப்படுத்தவும் எல்லாராலும் இயலாது.

**கணதாஸன்**— தேவி, கேளுங்கள். உலகத்தார் இவ்வாறு நினைக்கின்றார்கள். ஆகையால் இப்பொழுது,

இந்த விவாதத்தில் நான் எனது பயிற்றும் திறமையைக் காட்டப்போகின்றேன். இதற்குத் தாங்கள் அனுமதி அளிக்காவிடின், தாங்கள் என்னை விலக்கிவிட்டீர்களென்றே கருதுவேன்.

(ஆஸனத்திலிருந்து எழுந்திருக்க முயல்கின்றான்.)

**அரசி**— (மனத்துள்) வழி என்ன? (வெளிப்படையாக) ஆசிரியருக்குத் தம்மாணுக்கரை எவ்விதம் நடத்தவும் உரிமை உண்டு.

---

விலக்கிவிட்டீர்கள்— நான் விலகிவிடுவேன் என்பது கருத்து. அவ்வாறு பேசாதது அரசியின் கௌரவத்தைக் கருதியே. "நான் இந்த வாதினை விடேன். என் திறமையைக் காட்டாவிடில் எனக்கு இழிவே உண்டாகும். தாங்கள் ஸம்மதி கொடுக்காவிடில், ஸம்மதி கேட்கவேண்டிய நிலைமையை அறுத்துவிட்டு நான் ஸ்வதந்திரனாகி வாதப்போரினை நடத்தியே தீருவேன்." என்பது கணதாஸனது ஆழ்ந்த கருத்து.

ஆசிரியருக்கு—நானும் தங்களது மாணவியே; ஆகையால் தங்களிஷ்டம்போல என்னை நடத்தத் தடை என்ன என்பது வெளிப்படை. மாளவிகையை வெளிக்கிழுக்கவேண்டாமென்று நான் பலமுறைசொல்லியும் கேட்காமல் இந்த நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டீர்கள். இப்போது கூட நான் மாளவிகையைக் கொண்டு வர ஸம்மதிக்கமுடியாது. அவள் தங்களது மாணுக்கியாகையால், அந்த முறைமையில் தாங்கள் எது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம், என்னைக் கேட்பானேன்? என்பது வெறுப்புடன் கூடிய அரசியது ஆழ்ந்த கருத்து.

**கணதாஸன்**— வீணில் நெடுநேரம் ஐயப்பட்டு அச்சங்கொண்டேன். (அரசனை நோக்கி) தேவியார் அனுமதி அளித்துவிட்டார்கள். ஆதலின் தேவரீர் கட்டளையிடவேண்டும். எனது கற்பிக்குந் திறமையைக் காட்ட, எந்த விஷயத்தை அபினயிக்கச் செய்யவேண்டும்?.

**அரசன்**— பகவதியார் எதனைக் காட்டக் கட்டளையிடுகின்றாரோ, அதனை.

**பிக்குணி**— தேவியாரின் மனத்தில் என்னவோ இருக்கின்றது. அதுபற்றி எனக்கு ஐயமும் அச்சமும் உண்டாகின்றன.

**அரசி**— கூசாமல் சொல்லுங்கள். என்னுடைய ஏவலாளர்கள்

---

**வீணில்**— ஐயோ கணதாஸன் சிறிதும் கபடமில்லாத பரமஸாது.

**தேவியாரின்**— "சங்கிதா" என்ற வடசொல்லுக்குரிய ஐயம் அச்சம் என்ற இரண்டு பொருள்களையும் இங்குச் சேர்த்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. "தேவியாருக்கு ஏதோ ஐயப்பாடு என்மீது உண்டாயிருப்பதாகத் தோன்றுகின்றது. ஆகையால் நான் சொல்லச் சங்கிக்கின்றேன்". என்ற கருத்து மறைந்துள்ளது "தேவியார் மனத்தில் என்னவோ இருக்கிறது, அதாவது—இங்கு ஆடவேண்டியதாகக் குறிப்பிடக்கூடிய விஷயமொன்று தேவியாரது மனத்திலிருப்பதாக நான் நினைக்கின்றேன். ஆகையால் நானே விரைந்து முன்வந்து ஒரு விஷயத்தைக் குறிப்பிட அஞ்சுகின்றேன்" என்பது அவ்வாக்கியத்திற்கு வெளிக்கருத்தாம். இக்கருத்தும் பொருந்துமாறு கௌசிகி பேசியது, இதனைக் கேட்டபின் அரசியது மனப்போக்கு எவ்வாறிருக்கின்றது என்பதை உய்த்துணர்வதற்காகவே. இவைகளெல்லாம் கௌசிகியின் உலகியலறிவையும், பேசும் திறமையையும் விளக்குகின்றன.

**கூசாமல்**— "நான் ஒன்றும் குறிப்பிட விரும்பவில்லை. தாங்களே விஷயமொன்றைக் குறிப்பிடலாம். தாங்கள் குறிப்பிடும் விஷயத்தையே ஆடும்படி மாளவிகைக்கு நான் கட்டளையிடுவேன். அவள் எனது ஏவற்காரியாகையால் அவளை அவ்வாறு தூண்ட எனக்கு உரிமை உண்டல்லவா." என்பது வெளிப்படையான கருத்து. "கூசாமற்சொல்லலாம். நீங்களெல்லாரும் என்ன தந்திரம் செய்து மாளவிகையை அர

விஷயத்தில் என் இஷ்டப்படி நடக்க எனக்கு உரிமை உண்டன்றோ.

அரசன்— தேவி, என் விஷயத்திலும் என்று கூட்டிச் சொல்லுக.

---

சன் பார்க்கும்படி ஏற்பாடு பண்ணினபோதிலும்; அவள் என்னுடைய வேலைக்காரியாகையால் பிறகு அவளைத் தடைப்படுத்தவோ, அரசன் காணமுடியாவண்ணம் அடக்கியாளவோ எனக்கு உரிமை உண்டு. அவ்வுரிமையைக் கைக்கொண்டு உங்களது எண்ணம் முழுதும் நிறைவேறாதபடி செய்துவிடுகிறேன்." என்பது அரசியது உட்கருத்துக்களுள் ஒன்று. இக்கருத்தையே வெளிப்படைக் கருத்தாகச் சிலர் உரை எழுதுகின்றார்கள். அவ்வாறு கொள்வது தகாது. "கௌசிகியாரோ பிக்குணி. அரசரோ எனது ஆண்டவர். கணதாஸரோ ஆசிரியர். இம்மூவரும் ஸ்வதந்திரர்கள். எனது கட்டுப்பாட்டிற்குட்பட்டவர்களல்லர். மாளவிகை எனது பரிஜனங்களுட்சேர்ந்தவளாயினும், இப்போது ஆசிரியருக்கு மாணவியாயிருக்கவேண்டிய நிலைமை வந்துவிட்டது. ஆகையால் எனது மற்றைப் பரிஜனங்களில் என் வார்த்தை பயன்படுமேயன்றி உங்களில் பயன்படுமோ.? எனது உரிமை வேலைக்காரர்களிடமல்லாது உங்களிடமுண்டோ?." என்று தன்மனவருத்தத்தை அரசி ஸூசனையாகத் தெரிவிக்கின்றாளெனக் கொள்ளலுமாம். இக் கருத்து அரசனின் மேல்வாக்கியத்தால் அறியக்கிடக்கின்றது

என் விஷயத்திலும்— முற்கூறிய மூன்றும் கருத்தினைத் தழுவி அரசன் இவ்வாறு கூறுகின்றான். "நீ உனது வேலைக்காரர்கள் விஷயத்தில் போல என்விஷயத்திலும் உரிமையுள்ளவளே. ஆகையால் என்னை ஒதுக்கி வேலைக்காரர்களைப் பற்றி மாத்திரம் பேசவேண்டாம்" என்று அரசியின் வருத்தத்தை நீக்குபவன்போல அரசன் பேசுகின்றான். "என்விஷயத்திலும்" என்ற உம்மையைக் கூறாததைக் குறிப்பிடுவதாகக் கொண்டால் (சகார: அநுக்தஸமுச்சாயக:). பிக்குணிமுதலியோரையும் இங்குச் சேர்க்கக் கூடும். இதுவும் அரசனது தந்திரப்பேச்சே. "என்னிடமும் உரிமையில்லாமற்போனால், சித்திரத்திலெழுதியவளைப்பற்றி வினவியபோது மறுமொழி கூறியிருப்பாயன்றோ. அங்ஙனம் செய்யாதது உரிமையின் மஹிமைகொண்டல்லவா" என்று அரசன் கருதுகின்றான்போலும். "மம ச இதி ப்ரூஹி" என்பது மூலவாக்கியம். இந்த "மம" பதத்தை அரசியின் வாக்கியத்தில் நேராகவே புகவிட்டால் "அப்போது கூசாமற் சொல்லுங்கள். என்னுடைய ஏவலாளர்கள் விஷயத்திலும் என் விஷயத்திலும் என்னிஷ்டப்படி நடக்க என

**அரசி**— பகவதி, இப்பொழுது தாங்கள் சொல்லலாமே.

**பிக்குணி**— நாலடிகளுள்ள "சலிதம்" என்ற நாட்டியம், ஆடுவதற்கு எளிதன்று எனக் கூறுகிறார்கள். இவ்விரு ஆசிரியரும், அதிலிருந்து ஒரே விஷயத்தை எடுத்துக்கொண்டு ஆடச்செய்து, கற்பிப்பதில் தத்தமக்குள்ள திறமையைக் காட்டவேண்டும். அதிலிருந்தே படிப்பிப்பதில் இவர்களுக்குள்ள வேற்றுமையை அறியலாம்.

**இருவரும்**— பகவதியார் சொல்லுகிறபடியே.

**விதூஷகன்**— எனவே, இரு வர்க்கத்தினரும் நாடகசாலைக்குச் சென்று, ஆட்டம் பாட்டு வாத்தியம் என்ற மூன்றையும் இசைவித்துக்கொண்டு, அரசருக்கு ஓலை அனுப்பவேண்டும். அல்லது, மிருதங்கத்தின் தொனியே எங்களை எழுப்பிவிடக் கூடும்.

---

க்கு உரிமை உண்டன்றோ" என்பது அவ்வாக்கியத்தின் பொருளாகின்றது. அவ்வாறாயின், "என் விஷத்திலும்" என்பது அரசனைப் பற்றாது, அரசியையே எடுத்துக்காட்டும். எனவே "உனக்கு உன்னையும் உன் வேலைக்காரர்களையும் அடக்கியாள உரிமையே தவிர, மற்றவர்களைக் கட்டுப்படுத்த எவ்வித உரிமையுமில்லை" என்று அரசன் அரசியை நோக்கிச் சொல்வதாக ஏற்படுகின்றது. அரசனுடைய அப்போதைய நிலைமையில் இக்கருத்தும் பொருந்தாததன்று.

**இப்போழுது**— வெளிப்படையான கருத்தில் இதற்குக் குறிப்பிடக்கூடிய பொருளொன்றும் கிடையாது. பேச்சுவழக்கில் வரும் சொல்லே இது. "இந்த ஸ்திதிக்குக்காரியம் வந்தபின் ஏன் தயங்கவேண்டும்? சொல்லலாகாத காலம் கடந்துவிட்டது. இப்போது சொல்லலாமே" என்று பிக்குணியையும், "அரசர் எனக்கு ஸர்வஸ்வாதந்திரியம் கொடுத்துவிட்டாரே. இப்போது தங்களைச் சொல்லும்படி செய்ய எனக்கு உரிமை வந்துவிட்டதன்றோ. தாங்கள் இப்பொழுது சொல்லலாமே" என்ற கருத்தில் அரசனையும் இடித்துக் கூறுகின்றாளெனக் கொள்க.

**சலிதம்**—இப்பொழுதுதான் இந்தச் சலிதத்தை மாளவிகை பயின்றுவருவதால் அவள் மறக்காமல் நன்றாக அபிநயிக்கக் கூடும் என்பதையும், மேல் ஆடப்போகும் அந்தப்பாவில் மாளவிகைவிஷயமும் குறிப்பாக உணர்த்தப்படக் கூடுமென்பதையும் அறிந்தே பிக்குணி இவ்வாறு கூறுகின்றாள்.

**ஹரதத்தன்**— அப்படியே.

[எழுந்திருக்கின்றான்.

(கணதாஸன் அரசியைப் பார்க்கின்றான்.)

**அரசி**— ஆரியரது வெற்றிக்கு நான் இடையூறாக நிற்பவளல்லள்.

[இருவரும் புறப்பட்டார்கள்.

**பிக்குணி**— ஆசிரியர்களே, இங்கே வருக.

**இருவரும்**— (திரும்பி) இதோ வந்திருக்கின்றோம்.

**பிக்குணி**— முடிவு சொல்லவேண்டும் அதிகாரம் எனக்குக் கொடுத்திருப்பதால், அவ்வுரிமைகொண்டு பேசுகின்றேன்——"அபிநயிக்குங்கால் எல்லா உறுப்புக்களுடைய நேர்மையையும் ஆராயவேண்டுமாகையால், கோலத்தைக் குறைத்தே பாத்திரங்களைக் கொணர்க."

**இருவரும்**— இஃது எங்களுக்குச் சொல்லவேண்டியதன்று.

---

அப்படியே— இதுவரை வாயைத் திறவாத ஹரதத்தன், தனது மாணவியாகிய இராவதி நெடுநாளாகக் கற்றுவருவதால், அவள் மூலம் தான் வெற்றி பெறலாமெனக்கருதி இப்போது முன்வந்து பேசுகின்றான்.

ஆரியரது— கபடமறியாத கணதாஸன் கோபத்தால் சில வார்த்தைகளைக் கூறிவிடினும், கோபம் தணியத் தணிய இயற்கையாயுள்ள சாந்தநிலைமையை அடைகின்றான். ஆகையால் அரசியின் அபிப்பிராயத்திற்கு எதிராக நடக்க நேரிட்டதே என்று வருத்தப்பட்டு, அவ்வருத்தத்தைத் தனது பார்வையால் அரசிக்கு அறிவிக்கவே, ."இனி தடை செய்யக்கூடாது" என்றும், "முடியாது" என்றும், "மாளவிகையை வேறு வழியில் தடுத்துவிடலாம்" என்றும் நினைத்து, ஆசிரியனுக்கு உத்ஸாஹம் பிறக்குமாறு பேசுகின்றாள். "அரசரது வெற்றிக்குத் தடையாய் நிற்பேனேயல்லாது, ஆசிரியரது வெற்றிக்கு இடையூறாக நிற்கமாட்டேன்" என்பது உட்கருத்தாம்.

கோணர்க— உண்மையில் மாளவிகையின் ஒவ்வொரு உறுப்பும் அரசனுக்குப் புலப்படவேண்டுமென்ற எண்ணத்துடனேயே இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது.

**அரசி**— (அரசனைப் பார்த்து) இவ்வாறு எண்ணிய கருமத்தை ஈடேற்ற வழிதேடும் வல்லமை, தங்களுக்கு அரசியலினுமிருந்தால் நன்றாகும்.

**அரசன்**—

மெல்லிய மனமுடையவளே, நீ வேறு விதமாக நினைக்கக் கூடாது. இது நான் செய்ததன்று. ஒரே வித்தையில் வல்லுநர் பெரும்பான்மையாகத் தம்முள் புகழில் பொறாமை கொள்வாராவர்.

(திரைக்குள் மிருதங்கத் தொனி எழும்புகின்றது. எல்லாரும் செவிசாய்க்கின்றனர்.)

**பிக்குணி**— ஓ ஹோ, ஸங்கீதம் தொடங்கப்படலாயிற்று. ஆம், அவ்வாறே.

---

**அரசியலினும்**— இது பரிஹாஸவார்த்தையன்று; கோபமும் துக்கமும் வெறுப்பும் ததும்பிநிற்கும் வார்த்தை இது. "கிழவராகிய தகப்பனரிடத்திலும், சிறுவனாகிய பிள்ளையிடத்திலும், அரசியற்கடமையைப் பெரிதும் ஏற்றிவிட்டுத் தாம் கவலையற்றிருக்கும் நிலைமையின் பயனோ இது" என்று மறைபொருளாக இடித்துக்கூறுகின்றாள்.

**மெல்லிய**— "மநஸ்விநி" என்பது மூலத்திலுள்ள வார்த்தை. இந்தப் பதத்தை விசாலமனமுள்ளவள் என்ற பொருளிலும், ஊடலுள்ள மங்கைவிஷயமாகச் சிறிதும் குற்றம்பொறாத மனமுடையவள் என்ற பொருளிலும் உபயோகிப்பார்கள். இவ்விரண்டு பொருள்களுமிங்குப் பொருந்தும். இதனை எண்ணியே "மெல்லிய மனமுடையவளே" என்று மொழிபெயர்க்கப்பட்டது. "கருணை நிறைந்து, கடினமல்லாமல் மெதுவான மனமுடையவளாகையால் நீ குறுகினமனத்தினரையொப்ப இவ்வாறு நினைக்கலாகாது" என்று அரசன் புகழ்ந்து பேசினனெனலாம். "மனமெலிமையால் மருண்டவனுக்கு இருண்டதெல்லாம் பயமாவதுபோல உனக்கு ஒன்றுமில்லாத விஷயமெல்லாம் பெரிதாய்த் தோன்றுகின்றது" என்று இகழ்ந்து பேசினனெனவுமாம். **ஒரே வித்தையில்**— இங்கு நமது கவி தமது அநுபவத்தை வெளியிடுவதாக நினைக்கலாம்; "பெரும்பான்மையாக" என்று சொல்வதும், தமக்கு அவ்விழுக்காறில்லை என்று தெரிவிப்பதற்காகவேயாம்.

மேகத்தின் முழக்கம் என்று மயங்கி மயில்கள் கழுத்தை உயர்த்திக்கொண்டு அகவ, அந்தச் சப்தத்தோடு சேர்ந்து, மத்தியம ஸ்வரத்தில் கும் கும் என்று கம்பீரமான முழக்கத்துடன் மிருதங்கத்தின் வாயிலிருந்தெழும் " மாயூரி " என்ற மார்ஜனை, மனத்தை மகிழ்விக்கின்றது.

**அரசன்—** தேவி, அங்குச் சென்று ஸபையினராக இருப்போமே.

**அரசி—** (மனத்துள்) அந்தோ. என்ன ஐயரின் அடங்காத் தன்மை ?.

(எல்லாநும் எழுந்திருக்கின்றார்கள்.)

**விதூஷகன்—** (மறைவாக) தோழரே, தைரியத்துடன் அமைதியாக நடக்க. தாரிணி தேவி இனி ஏற்பாடுகளைக் குலைக்கமாட்டாள்.

---

மேகத்தின்— மார்ஜனையாவது—மிருதங்கம் வாசிப்பவன், பாட்டினோடு இசைவிப்பதற்காக மிருதங்கத்தில் வைத்த கையின் விரல்களைப் புரட்டி உண்டாக்கும் தொனி. மாயூரி, அர்த்தமாயூரி, கார்மாரவி என மார்ஜனைகள் மூன்றும். மிருதங்கவாயில் இடப்பாகத்தில் காந்தாரஸ்வரமும், வலப்பாகத்தில் ஷட்ஜஸ்வரமும், மேல்பாகத்தில் மத்தியமஸ்வரமும் ஏற்படுத்திக்கொண்டால் அது மாயூரிமார்ஜனையாம். ஸரிகமபதநி என்ற எழு ஸ்வரங்களில் 'ம' என்பது மத்தியமஸ்வரமாம். "இது ஸஸ்வரமான மத்யத்ரிகுணை" என்று சிலர் கூறுவர். இங்கு ஸங்கீத சாஸ்திரஸம்பந்தமாகப் பலவிஷயங்கள் எழுதவேண்டியிருப்பினும் விரிவஞ்சி விடுத்தோம்.

அந்தோ— அரசன் பரிஹஸிப்பவன்போலத் தன்னை அழைத்ததைப் பற்றி அரசி கூறியது உண்மையே. இதனை வெளிப்படையாக அரசி கூறாததற்குப் பலகாரணங்களும் உண்டல்லவா.

தோழரே— "ஒருகால் அரசி ஏற்பாடுகளைக் குலைத்துவிடுவாளோ என்றஞ்சி விரைவில் இக்காரியத்தை முடித்துவிடக் கருதி வேகமாக நடக்கவேண்டாம்" என்கிறான். "பரபரப்புடன் நடக்கவேண்டாம். இந்தப் பரபரப்பைக் கண்டு கோபங்கொண்டு அரசி காரியத்தைக் கெடுத்துவிடக்கூடும். அவ்வாறு கெடுக்காமலிருக்கவேண்டுமல்லவா" என்ற கருத்தில் மூல வாக்கியத்தை மொழிபெயர்த்தலுமாம். இது அபவாரணப்பேச்சு; அதாவது— கன்னத்தில் கையை வைத்து முகத்தை

**அரசன்—**

"உனது எண்ணம் கைகூடும் வழியில் நிற்கின்றது" என்று தெரிவிக்கும் சப்தமோ இது என எண்ணப் படுமாறுள்ள இந்த மிருதங்கத் தொனி, நான் தைரியமாயிருக்க முயன்றும், என்னை மன ஆராமைப்பட்டு விரைந்து செல்லத் தூண்டுகின்றது.

[எல்லாரும் செல்கின்றனர்.

---

முதலாம் அங்கம் முடிவு பெற்றது.



---

மறைத்துக்கொண்டு குறிப்புள்ளமனிதரோடுமட்டும் பேசுவது. இதனை நாம் "மறைவாக" என்று மொழி பெயர்த்தோம்.

உனது— "சப்த: ஸ்வமனோரதஸ்யேவ" என்பது மூலம். "காரிய ஸித்திமார்க்கத்தில் இறங்கும் மனோரதமென்ற ரதத்தின் சப்தம்போன்ற" என்று சிலரும், "மனமென்னும் ரதத்தின் சப்தம்போன்ற" என்று வேறு சிலரும் கூறுவர். இதனைப் பதப்பொருளாக்காமல் தொனிப் பொருளாக்குவது சிறந்ததாம்.

முதலங்கம் முற்றிற்று.

---

# இரண்டாம் அங்கம்.



(பாட்டு முதலியன ஒன்றோடொன்று இசைவிக்கப்பட்ட பின்னர், அரசன் அரசி பிக்குணி விதூஷகன் ஆகிய இவர்கள் பிரவேசித்து, தத்தமக்குரிய ஆஸனங்களில் அமர்ந்தனர். நிலைமைக்கு ஏற்றவாறு பரிஜனங்களும் வந்து சூழ்ந்து நிற்கின்றனர்.)

**அரசன்**— பகவதி, சான்றோராகிய இவ்விரு ஆசிரியருள் எவருடைய திறமையை நாம் முதலில் பார்க்கலாம்?

**பிக்குணி**— அறிவு முதிர்ச்சி இருவருக்கும் ஒத்துளதேயாயினும், கணதாஸர் வயதில் முதிர்ந்தவராகையால் அவரைத்தான் முதலில் பெருமைப்படுத்தல் வேண்டும்.

**அரசன்**— ஆகையால், ஏ மௌத்கல்ய, நீ சென்று ஆசிரியரிடம் இதனைத் தெரிவித்துவிட்டு, உன் காரியத்தைப் பார்த்துக்கொண்டிரு.

**கஞ்சுகி**— பிரபுவின் கட்டளைப்படியே.

[ சென்றான்.

(பிரவேசித்து)

**கணதாஸன்**— பிரபுவே, நாலடிகளில் மத்திய லயத்துடன் சர்மிஷ்டை செய்த பிரபந்தமொன்றுண்டு. அந்த நாலடி

---

பகவதி— ஒரு ஸமயம் அரசி ஹரதத்தனுடைய விஷயத்தை முதலாகக் கொண்டு வருவாளோ என்றஞ்சி, இதற்கிடமில்லாமற் செய்ய பிக்குணியை அரசன் இவ்வாறு வினவுகின்றான். பிக்குணி ஏதாவது ஒரு காரணம்கூறி கணதாஸனுடையவிஷயத்தையே முதலிற்கொண்டு வருவாளென்பது அரசனுக்குத் தெரியும். இப்பொழுது கூட அரசன் நடுநிலைமையை நடிக்கவே முயல்கின்றான். அரசியோ வியப்பிற்கும் கவலைக்குமுட்பட்டு நிற்கின்றாள். "இனித் தடைசெய்தும். பயனில்லை. இந்தத் தந்திரம் பலித்தே தீரும். ஆயினும் மேல் நடக்கவிருக்கும் காரியங்களை நடவாமல் தடுத்துவிடுவோம். இப்பொழுது எது வேண்டுமானாலும் நடக்கட்டும்" என்று கருதி அரசி ஒன்றிலும் ஸம்பந்தப்படாமலும் குறுக்கிடாமலு மிருக்கின்றாள். இந்த அங்கத்தில் அரசி பேசிய வாக்கியங்களும் ஐந்தே என்பதும் குறிப்பிடத்தக்கது.

பிரபுவே— சர்மிஷ்டை என்பாள் வ்ருஷபர்வா என்ற அஸுரராஜனது புதல்வி. லயமென்பது தாளங்களினிடைக்காலம். இங்குக்

களுடைய பொருள்கள் அபிநயித்துக்காட்டப்படுவதைத் தாங்கள் மனமிருத்திக் கேட்கவேண்டும்.

**அரசன்—** ஆசிரியரிடமுள்ள நன்கு மதிப்பினால் அவ்வாறே செய்கின்றேன்.

(கணதாஸன் சென்றான்.)

**அரசன்—** (ரகஸியமாக) தோழ,

திரையினுட்புறமிருக்கும் அந்த மாளவிகையைக் காண, பெரிதும் அவாக்கொண்டுள்ள என் கண், காலந் தாழ்த்தலைப் பொறாமல் அத்திரையை நீக்க முயல்கின்றது போலும்.

**விதூஷகன்—** (மறைவாக) ஏ, கண்ணுற் பருகும் தேன் கிட்டியிருக்கின்றது. தேனீயும் அடுத்து நிற்கின்றது. ஆதலின், தவறுதலுக்கிடம் கொடாமல் இப்போது தாங்கள் காண்க.

(பிறகு மாளவிகையும், மாளவிகையின் உறுப்புக்களது நேர்மையை நோக்கிக்கொண்டு கணதாஸனும் பிரவேசிக்கின்றனர்.)

**விதூஷகன்—** (ரகஸியமாக) பாருங்கள். சித்திரத்தினும் இவளது இனிமை குறையவில்லை.

---

காட்டும் நாட்டியம் சிருங்காரரஸத்தைப் பற்றியிருப்பதால் லயம் மத்தியமாகின்றது. இங்கு மூலத்தில் பல பாடங்களும், பல கருத்துள்ள வியாக்கியானங்களும்காணப்படுகின்றன. அவைகளுள் நமக்குநன்றெனத் தோன்றிய பாடத்தையும் கருத்தையுமே தழுவி இங்கு எழுதினோம்.

ஆசிரியரிடம்— இஃது ஒரு வெளிப்பேச்சு.

திரையின்— "காமுற்றவருடைய மனம், அவர் எண்ணியபடி காரியத்தைச் செய்யாவிடினும், செய்தாற்போலவே பாவனை செய்யும்" என்று சாகுந்தளத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

கண்ணுற் பருகும்—இங்குத் தேன் மாளவிகை. தேனீ தாரிணி. தாரிணியிருப்பதால் அமைதியாயிருக்கவேண்டும். காமமேலீட்டால் தவறுதலுக்கு இடங்கொடுக்கலாகாது என்று உணர்த்துகின்றான்.

சித்திரத்தினும்— பொதுவாகச் சித்திரம் வரைபவன் சிறிதளவு சேர்த்து அழகுபடுத்துவான். இங்கோ, பிம்பமும் பிரதிபிம்பமும் பேதமில்லாமல் ஒன்றுபட்டிருக்கின்றன என்கிறான் விதூஷகன்.

*அரசன்*— (ரகஸியமாக) *தோழ,*

இந்த மாளவிகையினுருவத்தைச் சித்திரத்தில் பார்த்த பொழுது “இவ்வாறும் ஓரழகு இருக்குமோ” என்று என் மனம் ஐயங்கொண்டது. இப்பொழுதோ, இவளை வரைந்த வனுக்கு மனவொருப்பாடு தளர்ந்திருக்கவேண்டும் என்று எண்ணுகின்றேன்.

*கணதாஸன்*— *பெண்ணே, பயப்படாமல் உனது இயற்கை நிலையில் இரு.*

*அரசன்*— (மனத்துள்) *ஆ ஆ; என்னே உருவத்தின் உறுப்புக்களது சிறப்பு!.*

முகம், நீண்ட கண்களையுடையதாய் சரத்காலசந்திரனை யொப்பக் காந்தி பொருந்தி விளங்குகின்றது. கைகள், தோள் பாகங்களில் சிறிது சரிந்து நிற்கின்றன. மார்பு, நெருங்கியுயர்ந்த ஸ்தனங்களுள்ளதாய் இடைவெளி குறுகியிருக்கின்றது. உடலின் இரு மருங்குகளும், விழல் சதை விழாமல் துடைத்துவிட்டாற்போலிருக்கின்றன. இடை, கைக்குளடங்குமாறிருக்கின்றது. நிதம்பம் பருத்து விளங்குகின்றது. கால்கள் சிறிது வணங்கிய விரல்களுடனிருக்கின்றன. ஒரு நாட்டியாசாரியன், பாத்திரத்தின் உருவம் எவ்வாறிருக்கவேண்டுமென்று தன் மனத்தில் எண்ணுவானோ, அவ்வாறே இவளது உருவம் அமைந்திருக்கின்றது.

---

இந்த —*சித்திரத்தைவிட உண்மையில் இவளுருவம் சிறந்தது என்கிறான் அரசன். இக்கருத்து, சாகுந்தளத்திலும் காணப்படுகின்றது. “சிதிலஸமாதிம்” என்ற வட சொல்லுக்குச் சிலர், வாஸனை குறைந்தவன் என்றும், உபகரணங்கள் (வேண்டிய வஸ்துக்கள்) குறைந்தவன் என்றும் பொருள் கூறுவர்.*

முகம்—*“தீர்க்காக்ஷம்......” என்ற மூல சுலோகத்தில் ராமாயணத்தை அனுஸரித்து முதன் முதலாகக் கண்ணையே சிறப்பித்துக் கூறுகின்றார் மஹாகவி. இங்குப் பாத்திரத்தினுடைய குணங்களையும் இலக்கணத்தையும் ரத்னாகரத்தில் பாக்கக் காண்க. வடமொழிக்கவிகள் உவமானப் பொருள்களைப் புகுத்தி வர்ணிப்பார்களேயன்றி இயற்கை அமைப்பை வர்ணிக்க அவர்களாலாகாது என்று பிதற்றுபவர் இவ்வர்ணனையை நன்கு உய்த்துணர்வாராக.*

**மாளவிகை**— (ராகாலாபனம் செய்து, நான்கடிகளுள்ள பாவைப் பாடுகின்றாள்)

மனமே, நீ விரும்பும் புருஷன் கிடைப்பதற்கரியவன். அவனிடம் விருப்பங் கொள்ளாமலிரு. (2) ஆ ஆ! எனது இடக்கடைக்கண் ஏதோ சிறிது துடிக்கின்றது. (3) நெடுநாளாக நினைத்தும் இன்றே காணக் கிடைத்த இவனை நான் மறு முறை காண்பது எங்ஙனம்? (4) ஏ நாத, நான் பிறர் வசத்திலிருப்பவள் என்பதையும், உன்னிடம் காதல் கொண்டவள் என்பதையும் நீ அறியவேண்டும்.

(ரஸத்திற்கு உற்றவாறு அபிநயிக்கின்றாள்.)

---

ராகாலாபனம்— உபவஹனம், உபகானம், என இரு பாடங்களுண்டு. இரண்டிற்கும் ராகாலாபனமென்பதே பொருளெனச் சொல்லுகின்றார்கள். சிலர், உபவஹனமென்பது பாட்டுடன் ஆட்டம் ஆடுவதற்கு முன் தாளம் இசைத்துப் பார்க்கச் செய்யும் வெறும் ஆட்டம் என்கின்றனர்.

மனமே—இத்தப் பா யயாதியைக் குறித்து சர்மிஷ்டையால் பாடப்பெற்றது. பெண்களுக்கு இடக்கண் துடிப்பது சுப சகுனமாம். "சிரத்ருஷ்ட:" என்பது மூலத்திலுள்ள வட சொல். வெகு காலத்திற்கு முன்பு காணப்பட்ட என்ற பொருளும் இதற்குப் பொருந்தும். சர்மிஷ்டை யயாதியை முன்பு கண்டிருக்கலாமாயினும், இங்கு மாளவிகை இதற்கு முன் அரசனைக்கண்டதாகத்தெரியவில்லையாதலின் நாம் வேறுவிதமாக மொழி பெயர்த்தோம். இந்த அரசனுக்குத் தன்னைக் கொடுப்பதாகக் கூட்டிவந்தது மாளவிகைக்குத் தெரியுமாதலால், அவள் இவ்வரசனை வெகுநாளாகக் காண விரும்பியதாகக் கூறுவதில் பிழையொன்றுமில்லை. சர்மிஷ்டை பிறர் வசத்திலிருப்பது, தேவயானியின் அடிமையாயிருப்பதாம். இங்கு மாளவிகை தாரிணியின் வேலைக்காரியாயிருப்பது, பிறர் வசத்திலிருப்பதாகும். சர்மிஷ்டையின் சரிதையைப் பாரதத்திலிருந்து அறிந்துகொள்க. "யயாதேரிவ சர்மிஷ்டா பர்த்துர்பஹுமதா பவ" என்று சாகுந்தள நாடகத்தில் பேசும் நமது மஹாகவி, மாளவிகை தனது மனோரதத்தைத் தெரிவிக்க அனுகூலமான இந்தச் சலிதத்தை இங்கு புகவிட்டதும், இளையாளாகிய சர்மிஷ்டையைப் போல மாளவிகையும் தன் கணவனுக்கு மிகவும் ப்ரீதிபாத்திர மாயினள் என்பதை இதன்மூலம் குறிப்பாலுணர்த்துவதும் எத்துணைச் சிறப்புள்ளன என்பதை ரஸிகர்களே அறியக்கூடியவர்.

**விதூஷகன்**— (ரகஸியமாக) ஏ தோழ, மதிப்பிற்குரிய மாளவிகை, இந்த நான்கடிச் செய்யுள்வழியாகத் தன்னையே உமக்கு உரிமையாக்கிவிட்டாள்.

---

இங்கு நான்கு அடிகளில் முறையே நிர்வேதம் (வெறுப்பு), விஸ்மய(வியப்பு)த்துடன் கூடின ஹர்ஷம் (மகிழ்வு), சிந்தா(கவலை), தைந்யம் (மனச்சோர்வு) என்ற நான்கு பாவ(ஹாவ)ங்கள் (உள்ள நிகழ்ச்சி) குறிப்பிடப்பட்டன. நிர்வேதம் என்பது, தன்னைத் தானே இகழ்தலாம். அதாவது, தான் வாழ்வது வீண் என்று நினைத்தலாம். இது பிரியமான பொருளின் பிரிவுமுதலியவற்றால் உண்டாகும். இஷ்டமான பொருள் கிடைப்பது முதலியவற்றாலுண்டாகும் மனமகிழ்ச்சிதான், ஹர்ஷமென்பது. இஷ்ட வஸ்து கிட்டாமை முதலியவற்றால் ஏற்படும் மனத்தின் தியானநிலை, சிந்தை என்பதாம். ஔத்ஸுக்யம்(காலந்தாழப் பொறாமை) முதலியவற்றால் ஏற்படும் மனச்சோர்வு தை (தெ) ன்யமெனப்படும். இவ்விலக்கணங்களை நன்காராய்ந்து பொருத்துக. இந்தப் பாவங்கள்வழியாக இங்கு ச்ருங்காரரஸம் (உவகைச்சுவை) வெளிப்படுகின்றது. இந்தப் பாவினைப் பூர்வாநுராகவிப்ரலம்ப ச்ருங்காரத்திற்கு (பிரிந்துறையின்பத்தின் ஒரு பிரிவான உழுவலன்பு) உதாஹரணமாக சிங்கபூபாலன் காட்டியிருக்கின்றான். இங்குப் பல்வேறு வகையில் பாவபேதங்களை எடுத்துக் காட்டலாமாயினும் விரிவஞ்சி விடுத்தோம். தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலையும் இரையனாரகப்பொருளையும் நன்கு கற்றறிந்த தமிழ்ப் புலவர்களும், வடமொழியில் ரஸஸம்பிரதாயத்தை நன்றாயுணர்ந்த பண்டிதர்களும் இங்குத்தாமே பல விஷயங்களையும் உய்த்துணர்வாராக. இங்கு நான்கடிகளில் முறையே வைராக்யம், ஔத்ஸுக்யம், ஸங்கல்பம், ஆத்மோபஸர்ப்பணம் என்ற நான்கும் தெரிவிக்கப்பட்டன என்பது ஒருவரின் உரை. நடந்த செய்தியையும் நிகழும் செய்தியையும் வரும் செய்தியையும் நாடகத்தில் ஆங்காங்கு அழகாகக் குறிப்பிடுவது நமது மஹாகவியின் வழக்கம். அவ்வாறே இங்கும் குறிப்பிட்டிருக்கின்றார். முதலடியால் மாளவிகைக்கு நேர்ந்த இடையூறுகளும், இரண்டாம் அடியால் அவளுக்கு இப்போது நிகழும் பாக்கிய நிலைமையும், மூன்றாம் அடியால் இனி நடக்கவேண்டிய அவளது விருப்பமும், நான்காமடியால் அது நிறைவேற அரசன் செய்யவேண்டிய காரியமும் குறிப்பிடப்பட்டன எனக் கொள்ளலாம்.

ஏ தோழ— "முற்காலத்தில் நடந்த ஒரு காரியத்தை வியாஜமாகக்கொண்டு தனது எண்ணம் வெளிப்படுமாறு நேராக அபிநயிக்கப்படும் நாட்டியத்திற்குச் சலிதம் (சலிகம்) என்பது பெயர்." என்ற இலக்

**அரசன்**— (ரகஸியமாக) நண்ப, நம்மிருவரெண்ணமும் இவ்வாறே. இவளோ,

தாரிணி அடுத்திருப்பதால் தனது வேண்டுகோளை வெளியிட வேறு வழி காணுமல், "ஏ நாத, இவளைக் காதலுடையவளாகக் கருதுக" என்ற பாட்டின்பொருளைத் தனது அங்கத்தைத் தோட்டுக் காட்டி அபினயித்து, இதன்மூலமாக இனிய முறையில் என்னையே வேண்டிக் கோண்டனள் போலும்.

(மாளவிகை பாட்டு முடிந்ததும் புறப்படத் தொடங்கினுள்.)

**விதூஷகன்**— அம்மா, சற்று நில். மறதியால் முறை தவறி ஒன்று நடந்திருக்கின்றது. அதனைவினவப்போகின்றேன்.

**கணதாஸன்**—பெண்ணே, நில். நான் கற்பித்தது குற்றமற்றது எனத் தெளிவித்தபின் போகலாம்.

(மாளவிகை திரும்பி நிற்கின்றுள்.)

**அரசன்**—(மனத்துள்) ஆச்சரியம். அழகு எந்த நிலைமையிலும் பிறிதோரழகைப் பயக்கின்றது. அவ்வாறன்ருே—

மணிக்கட்டில் வளைகள் வந்து தங்கி அசையாவண்ணம் இடது கையை நிதம்பத்தில் வைத்தும், வலதுகையை ஞாழற்கோடிக் கோப்பாகத் துவளத் தோங்கவிட்டும், அரங்க மேடையில் கிடக்கும் பூக்களைத் தனது காற்பெருவிரலால் இழுத்தும், அங்கேயே பார்வையைச் செலுத்தியும், உடம்பு கூனுமல் நிமிர்ந்தும் நிற்கும் இவளுடைய நிலை, ஆட்டத்தினும் அதிகம் அழகு பெற்று விளங்குகின்றது.

---

கணப்படி, விதூஷகன் கூறியதும் உண்மையாகவே இருக்கவேண்டுமன்ருே.

**தாரிணி**— "தாரிணி அடுத்திருப்பதால் நான் எனது காதலை வெளியிட முடியாமலிருந்தமையால், என்னை வேண்டிக்கொண்டனள்போலும்" என்பது காடயவேமனின் உரை.

**மணிக்கட்டில்**—அரங்கவழிபாடு நடத்துகையில் புஷ்பங்களை வாரியிறைப்பது வழக்கம். "ஆலுலித" என்ற வடசொல்லுக்கு "தேய்க்கப்பட்ட" என்ற பொருளும் பொருந்தும். தலை குனிந்து பூக்களை விரலால் இழு

**அரசி**— ஆசிரியர் கௌதமனது வார்த்தையைக் கூட மனத்திற் கொள்ளவேண்டுமா ?

**கணதாஸன்**— தேவி, அவ்வாறன்று. பிரபுவின் பழக்கத்தால் கௌதமருக்கும் நுண்ணறிவு பிறந்திருக்கக்கூடும்.

கலங்கிய நீர் தேற்றும் விதையை உறைத்துச் சேர்ப்பதால் தெளிவு பெறுவதுபோல, அறிவிலியும் அறிஞனது சேர்க்கையால் அறிவு பெறுகின்றான்.

(விதூஷகனைப் பார்த்து) நீர் சொல்ல விரும்புவது என்ன? கேட்கின்றோம்.

**விதூஷகன்**— ( கணதாஸனைப் பார்த்து ) ஸாக்ஷியாயிருந்த பகவதியைக் கேட்க. பிறகு நான் கண்ட முறைத் தப்பினைச் சொல்கின்றேன்.

**கணதாஸன்**— பகவதி, குணமோ தோஷமோ எதாயினும் தாங்கள் கண்டவண்ணம் சொல்லுக.

---

ப்பதும் தேய்ப்பதும் வெட்கத்தின் காரியங்களாம். "ஆட்ட ஸமயத்தில் பூக்கள் மிதிக்கப்பட்டன" என்று உரை எழுதுவோர், "காற்பெருவிரலால்" எனக்கூறியிருக்கும் கவியின் கருத்தை அறிந்திலர். "எந்த நிலைமையிலும் செய்கைகள் மெல்லியனவாயிருப்பது மாதுர்யமாம்." என்று இலக்கணம் கூறிவிட்டு அதற்கு இந்தச் செய்யுளை உதாஹரணமாகக் காட்டியிருக்கின்றான் சிங்கபூபாலன்.

ஆசிரியர்— அடங்கியிருந்த தாரிணியின் பொறாமை மெதுவாகத் தலை தூக்கத் தொடங்குகின்றது. மாளவிகையை அரங்கத்திற்கு வரவழைக்காமல் தடுக்க முடியாமையால், அவளது ஆட்டத்தையும் அனுமதிக்கவேண்டியதாயிற்று. அது முடிந்தபின்பும் மாளவிகையை அரசர் நெடுநேரம் காணத் தாரிணி உடன்படுவாளோ?.

தேவி— இன்னமும் கணதாஸன் தனது மனவெண்மையையே காட்டுகின்றான். இப்பொழுது கூட அரசியின் குறிப்பை இவன் அறிந்தானில்லை; கல்வி விஷயத்தில் எவ்வாற்றானும் தனது மேன்மையையே இவன் நிலை நிறுத்த விரும்புகின்றான்.

ஸாக்ஷியாயிருந்த— ஒரு விஷயத்தை நேரில் அறிந்தவனே ஸாக்ஷியாகின்றான் எனப் பாணினி ஸூத்திரம் கூறுகின்றது. இன்னமும் சிறிது விளம்பம் செய்விக்கக் கருதியே விதூஷகன் இவ்வாறு பிக்ஷுணியைக் கேட்குமாறு உரைக்கின்றான்.

**பிக்ஷுணி**—(*நான் பார்த்தவரையில் குற்றமொன்றும் கூறுவதற்கில்லை. ஏன்?*).

அபிநயித்துக் காட்டவேண்டிய பொருள்களை இவளுடைய ஒவ்வொரு உறுப்பும் பேசுவதுபோல நன்கு குறிப்பிட்டுக்காட்டியது. இவளது அடிவைப்பும் லயத்திற்கு ஒத்திருந்தது. அந்த அந்த ரஸத்தைக் காட்டும்பொழுது இவளும் அந்த அந்த ரஸமாகவே விளங்கினாள். விரல்களால் காட்டும் அபிநயமும் மெல்லியதாயிருந்தது. அந்த அபிநயத்தின் உட்பிரிவுகளைத் தொடருகையிலும் ஒரு பா (ஹா) வம் மற்றொரு பாவத்தை அதனுடைய விஷயத்திலிருந்து தூண்டுவதாகக் காணப்பட்டது. மனத்தை மகிழ்விக்கும் முறையும் ஒரே மாதிரியாக நின்றது.

---

**அபிநயித்து**— "*கண்டேநாலம்பயேத் கீதம் ஹஸ்தேநார்த்தம் ப்ரதர்சயேத். சக்ஷுர்ப்ப்யாம் தர்சயேத் பாவம் பாதாப்ப்யாம் தாளமாசரேத்.*" "*யதோ ஹஸ்தஸ்ததோ த்ருஷ்டிர்யதோ த்ருஷ்டிஸ்ததோ மன:. யதோ மனஸ்ததோ பாவோ யதோ பாவஸ்ததோ ரஸ:.*" என்பது நாட்டிய சாஸ்திரத்தின் தலையாய கொள்கை. அஃதாவது— வாயால் பாட்டினைப் பாடவேண்டும். கைகளால் பொருளைக் காட்டவேண்டும். கண்களால் உள்ள நிகழ்ச்சியை (ஹாவ) வெளியிடவேண்டும். கால்களால் தாளத்தை நிகழ்த்தவேண்டும். கை எங்கோ, அங்குத்தான் கண்; கண் எங்கோ, அங்குத்தான் மனம்; மனம் எங்கோ, அங்குத்தான் பா (ஹா) வம்; பாவம் எங்கோ, அங்குத்தான் ரஸம்—என்பதாம். இதனை இந்தச் செய்யுளில் பொருத்திக்காண்க. வாயால் பேசினால் எவ்வளவு தெளிவாக விஷயங்கள் தெரியக்கூடுமோ, அவ்வளவு தெளிவாக அபிநயத்தால் தெரிவிக்கப்பட்டன என்பது கருத்து. "அந்தர்நிஹிதவசனை:" என்பது வடசொல். "அபிநயத்தில் பேச்சுமிருக்குமாதலால், பேச்சோடு கூடிய, என்பது பொருள்" என ஒருவர் எழுதுகிறார். "தன்மயத்வம் ரஸேஷு" என்பது மூலம். "ரஸேஷு" என்று பன்மையில் கூறப்பட்டிருக்கிறது. இங்கு ரஸமோ ஒன்றுதான். ஆகையால் இங்கு ரஸபதத்திற்கு பா (ஹா) வமென்றே பொருள் கொள்ளவேண்டுமென்பர். இந்தப் பாவங்கள் முன்னரே காட்டப்பட்டிருக்கின்றன. அந்த அந்த ரஸத்தை அபிநயிக்கும்பொழுது இவள், அந்த அந்த ரஸமே இவ்வாறு உருவெடுத்து வந்தாற்போலத் தோன்றினாள் என்பது கருத்தாம். முதிர்ந்த யோகநிலையில் தியானிப்பவன் தியானிக்கப்படும் பொருளாகவே விளங்குவான் என்ற கொள்கையைத் தழுவி, இங்கு அபிநயிக்கின்ற மாளவிகை அபிநயிக்கப்படும் ரஸமாக விளங்கினாளென்று மஹா கவி கூறியிருக்கின்றாரெனவும் கூறுவர். வேறு சிலர், "பூவில் தேன் நிறைந்திருப்பதுபோல அவயவங்களில் ரஸம் பூர்ணமாயிருக்கவேண்டும்" என்று ஸங்கீத ரத்னாகரத்தில் சொல்லியிருப்பதை அனு

ஸரித்து, "தந்மயத்வம்" என்ற சொல்லுக்கு ரஸம் நிறைந்திருத்தல் எனப்
பொருள் கொள்கின்றார்கள். மற்றும் சிலரோ, "தன்மயத்வம்" என்பதற்கு
அநுகரிக்கப்படுகிற (யாருடைய வேஷத்தை ஆடுகிறவர்கள் போட்டுக்கொள்
கின்றார்களோ, அவர்கள்) வர்களாகவேயிருத்தல் எனப்பொருள் உரைக்கின்றார்
கள். "சாகாயோநிர்ம்ருதாபிநய:" என்பது மூலம். சாகை என்றால் கிளை;
அதாவது இங்கு விரல். "அங்கை:" என்று பிரதான அங்கங்களை முதலில் சொ
ன்னது என்றும், இங்கு உபாங்கங்களுக்கு உபலக்ஷணமாக விரல் கூறப்பட்
டது என்றும் அறியுக. "ஆங்கிகஸ்து பவேச்சாகா என்ற பாதத்தை அநுஸரி
த்து, அங்காபிநயம் நிறைந்தது" என்று சிலர் கூறுவர். வேறு சிலர் "தஸ்ய
சாகாங்குரோ ந்ருத்தம் ப்ரதானம் த்ருதயம் மதம். தத்ர சாகேதி விக்யாதா விசி
த்ரா கரவர்த்தநா" என்ற ரத்நாகர வசனத்தைத் தழுவி, சாகாயோநி பதத்திற்
குக் கரவர்த்தனை (அவ்வப் பொருளைக் காட்ட சாஸ்திரத்தில் கூறிய ந்ருத்த ஹஸ்
தங்களை முறைப்படி உபயோகித்தல்) யினாலுண்டான எனப் பொருள் உரைக்கி
ன்றார்கள். அபிநயம், ஸௌகுமாரம் (மெல்லியது) என்றும், ஆவித்தம் (கடின
மானது) என்றும் இரு கூறாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. "தத்விகல்பானுவ்
ருத்தௌ பரவோ பாவம் நுததி விஷபாத்" என்பது மூலம். "அபிநயிக்கப்
படும் நிர்வேதம் முதலிய பாவம், முன்பு அபிநயிக்கப்பட்ட பாவத்தை ஆச்ரய
மான ஸ்தாயிபாவத்தி (நிலைக் கருத்து) லிருந்து விலக்குகின்றது" என்றான் கா
டயவேமன். இதன் கருத்து நன்கு விளங்கவில்லை. "அந்த அபிநயத்தின் பிரி
வுகளைக்காட்டத் தொடங்குகையில், பாவம்—ஸம்ஸ்காரம் (பயிற்சி), பாவத்தை—
மனத்தை, விஷயத்திலிருந்து—முன் கைக்கொண்ட பொருளிலிருந்து, தூண்டுகின்
றது— வேறு விஷயத்தில் செலுத்துகின்றது. அதாவது— மேதாவியான கவி
யொருவன் பயிற்சித் திறமையால் புதிய புதிய விஷயத்தைக் கற்பித்தெழுதுவது
போல, இவனும் அப்பியாஸத்தின் திண்மைகொண்டு முன் காட்டிய விஷயத்தை
விட்டு ரஸபாவத்திற்குத் தக்கபடி புதிய புதிய பொருளைக் கற்பனாசக்தியால் கண்
டு அபிநயிக்கின்றான் என்பதாம்" என ஒருவர் உரை எழுதுகின்றார். "இவர்
பொருள்களை அபிநயித்துக் காட்டுவது, பார்ப்போரின் மனத்தை வேறு விஷய
த்திலிருந்து இழுக்கின்றது" என்பது ஒரு சாரார் கருத்து. "வெறுப்பு
வியப்பு மகிழ்ச்சி கவலை சோர்வு முதலிய பாவங்கள், தம்முள் முரண்பாடுள்
ளன. இங்ஙனம் முரண்பட்ட பாவங்களை அடுத்து அடுத்துக் காட்டுவது மிக
வும் அரிய செய்கையாம். மாளவிகையோ தனது திறமையால் இவைகளை வெகு
நன்றாகக் காட்டுகின்றாள். அப்பொழுது இந்தப் பாவங்கள், விரோதத்தை
விட்டு நேசங்கொண்டு ஒன்றையொன்று அததன் விஷயத்திலிருந்து முன்வரத்
தூண்டிக் கிளப்பிவிடுகின்றனவாகக் காணப்படுகின்றன." எனக் கருத்துரைப்
பது நன்கு பொருந்தும். "சாகாயோநிர்ம்ருதுரபிநயஸ் தத்விகல்பானுவ்ருத்
தௌ" என்று ஒரு வாக்கியமாக்கி "ரஸப்பிரிவைத் தொடருகையில் சாகாயோ
னியான அபிநயம் மிருதுவாயிருக்கின்றது" என்றும் சிலர் பொருள் கூறுவர்.
"ராகபந்த: ஸ ஏவ" என்பது மூலம். ஆட்டக்காரருள் சிலர்க்குச் சில ரஸங்க
ளை அபிநயிப்பதில் மட்டுமே சிறந்த திறமை இருக்கும். மற்றவைகளை அபிநயி

**கணதாஸன்**— பிரபுவே, தங்களுடைய கருத்து என்ன?

**அரசன்**— கணதாஸரே, நமக்கு நம் கட்சியில் அபிமானம் தளர்ந்து போகிறது.

---

க்கும்போது காண்போருக்கு அவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுவதில்லை. மாளவிகைக்கோ எல்லா விஷயங்களிலும் ஒரு போலத் திறமை இருப்பதால், அடி முதல் முடிவரை ஒரே மாதிரி யாகவே பார்ப்போருக்கு மனமகிழ்ச்சி உண்டாயிற்று என்பது கருத்து. "விக்ருதேஹ மனோவ்ருத்திம் முகராகோ ரஸாத்மிகாம்." என்றான் ரத்னாகரகாரன். ரஸாத்மிகையான சித்த வ்ருத்தியை முகராகம் தெரிவிக்கின்றது என்பது இதன் பொருள். முகராகமாவது முகத்தின் நிறக்குறி. இது ஸ்வாபாவிகம், (இயற்கையானது) ப்ரஸன்னம், ரக்தம், ச்யாமம் என நால் வகைப்பட்டது. இங்கு "ராகபந்தம் அதுவே" என்றமையால் ஸ்வாபாவிகமென்னும் முகராகம் கூறப்பட்டது" என்றும் கூறுவர். "அதுவே" என்றால் பரதசாஸ்திர முறைப்படியுள்ளதே என்பதுதான் பொருள். "ப்ரஸந்நோ நிர்மலோ ஹாஸ்யே ச்ருங்காரே சாத்புதே பவேத்." என்ற வசனப் பிரகாரம் இங்குச் ச்ருங்காரரஸமாகையால் முகராகம் ப்ரஸன்னமாகவேண்டும். "புன்சிரி கொண்டும், ஒளியேறியும், பேசுவதுபோல அடிக்கடி தோன்றியும், கண்ணும் கருவிழியும் உள்ள நிகழ்ச்சியை வெளியிடும் பார்வை பொருந்தியும் முகம் விளங்குவது ப்ரஸன்னமென்னும் முகராகமாம்" என அதன் இலக்கணம் கூறப்பட்டிருக்கின்றது. "ரஸோபிநேயோ வாகங்க ஸத்வாஹார்ய ஸமுச்சயாத்" என்றது பரதசாஸ்திரம். ரஸத்தை அபிநயத்தால் வெளியிடவேண்டுமானால், வாக்கின் அபிநயம் (வாயால் பாவினைச் சொல்லுதல்) அங்கங்களின் அபிநயம், ஸாத்விகா (விறல்) பிநயம், ஆஹார்யாபிநயம் (ஆபரணங்களைப் பூணுதல்) ஆகிய நான்கு அபிநயங்களும் வேண்டும் என்பது நாட்டிய சாஸ்திரக் கொள்கை. "மனமே—" என்ற பாவினால் முதலாவதும், "அங்கை:—" என்பதால் இரண்டாவதும், "தன்மயத்வம் ரஸேஷு" "பாவோ பாவம்" என்பதால் மூன்றாவதும்; "கோலத்தைக் குறைத்தே கொணர்க" என்று கீழ்ச் சொல்லியதால் நான்காவதும் தெரிவிக்கப்பட்டன எனக் கொள்க. மஹா கவியின் நாட்டியசாஸ்திர பாண்டித்தியத்தை விளக்கச் சிறிதும் எனக்கு யோக்கியதையில்லை என்பதை நானே உணர்ந்திருந்தும், சாபல்யத்தால் சிறிது கூறினேன். அவைகளிலுள்ள குற்றங் குறைகளைக் கற்றறிந்தோர் பொறுப்பாராக.

**நம் கட்சியில்**—இஃது உண்மையே. இப்பொழுது அரசருக்குத் தமது கட்சியைச் சேர்ந்த ஹரதத்தன் இராவதி ஆகிய இவர்களிடமும் குறிப்பாய்த் தாரிணியிடமும் அபிமானம் தளர்ந்துபோகவேண்டியதுதானே. அபிமானம்—என் கட்சி சிறந்ததென்ற செருக்கு, ப்ரிவு.

**கணதாவஸன்**— இன்றுதான் நர்த்தனுசாரியனுயினேன்.

தீயிலிட்ட தங்கம்போல உங்களிடம் காட்டிய எந்த உபதேசம், கருமையுமாறுதிருக்கின்றதோ, ஆசிரியனது அந்த உபதேசத்தைத்தான் தூயதெனப் பகுத்தறிவுள்ளவர் பகர்கின்றனர்.

**அரசி**— ஸந்தோஷம். பரீக்ஷை செய்தவர்கள் திருப்தியுற்றதால் ஆசிரியருக்கு ஓர் ஏற்றம் ஏற்பட்டது.

**கணதாவஸன்**— தேவியார் அங்கீகரித்திருப்பதுதான் எனது மேன்மைக்குக் காரணம். (விதூஷகனைப் பார்த்து) கௌதமரே, உமது மனத்திலுள்ளதை இப்போது கூறலாமே.

**விதூஷகன்**— முதன்முதலாக உபதேசத்தைக் காட்டத் தொடங்குங்கால் பிராமண வழிபாடு முதலிற் செய்யவேண்டும். இதனை நீங்கள் மறந்துவிட்டீர்கள்.

**பிக்குணி**— ஆ! ஆ!! அபினயத்தினுட் புகுந்த கேள்வி!!!

**விதூஷகன்**— பகவதி, வேறு என்ன? "தாம் ஒருவரே எல்லாமறிந்தவர்" என்று நினைத்துக் கொண்டிருக்கின்றீர்.

---

**தீயிலிட்ட**— இக்கருத்தை ரகுவம்சம் முதல் ஸர்க்கம் பத்தாம் செய்யுளிலும் காண்க.

**ஸந்தோஷம்**— இந்த ஸந்தோஷம் பேச்சில் மட்டும் இருக்கலாம். ஒருகால் மனத்திலுமிருக்கலாம். "நான் எவ்வளவு தடை சொல்லியும் கேளாமல் வாதுசெய்து பரீக்ஷையில் வெற்றி பெற்றீர். இதிலிருந்து உமக்குக் கிடைத்த பயன் யாது. ஐயோ வெண்மை!" என்று அரசி இடித்துக் கூறினளெனக் கொள்ளனுமாம்.

**தேவியார்**— அந்தோ! மனவாழுமில்லாத கணதாஸன் நேர்மையில் பேசுகின்றான். அல்லது, வெற்றி பெற்றமையால் கோபம் நீங்கி மனந்தெளிந்த கணதாஸன், அரசியது உட்கருத்தை ஆராய்ந்தறிந்து, அவளது மனம் குளிர இவ்வாறு பேசுகிறனெனக் கொள்ளனுமாம்.

**முதன் முதலாக**— இஃது ஒரு விளையாட்டுப் பேச்சு. மாளவிகையைச் சிறிது நேரம் நிறுத்த இஃது ஒருபாயமன்றோ.

**பகவதி**— மாளவிகையுள்பட எல்லாரும் சிரிப்பதற்காகவும், தாரிணியின் கோபத்தைச் சிறிது தணிப்பதற்காகவும் விதூஷகன் இவ்வாறு பகவதியைப் பரிஹஸிக்கின்றான்.

கொழுக்கட்டையைக் கடிக்கவும் வல்லமையற்ற உமக்கு வேறு என்ன தெரியும்? வெண்மதிக்கதிரை யொத்த கூந்தலால் இங்கிருப்பவர்களைப் பயப்படுத்துகின்றீர்.

(எல்லாரும் உரக்கச் சிரிக்கின்றனர். மாளவிகையும் புன்னகைகொள்கின்றாள்.)

**அரசன்**— (மனத்துள்) எனது கண், தனக்குப் புலனாகக் கூடிய பொருள்களுள் சிறந்த பொருளைக் கண்டெடுத்துக்கொண்டது. இந்தக் கண்ணன்றோ,

பற்கள் அழகாகச் சிறிது வெளித்தெரியும்வண்ணம் புன்னகை பூத்த ஏரார்ந்த கண்ணியாகிய மாளவிகையின் முகத்தைப், பூந்தாது முழுவதும் புலப்படாதவாறு சிறிது விரிந்த தாமரைப் பூவையொப்பக் கண்டது.

**கணதாஸன்**— சிறந்த அந்தணரே, இஃது அரங்கவழிபாடன்று. அற்றேல், பூசனைக்குரிய உம்மைப் பூஜிக்காது விடுவோமா?

**விதூஷகன்**— எனது விருப்பம், வெறும் முழக்கமிடும் வரண்ட மேகமுள்ள வானத்தை நோக்கி நீர் அருந்தக் கருதி நிற்கும் சாதகப்பறவையின் விருப்பம் போலவா ஆயிற்று?

**பிக்குணி**— அவ்வாறே.

**விதூஷகன்**— பகவதி; அறிவிலிகள், ஒரு காரியத்தின் மேன்மையை அறிஞரின் அகக் களிப்பைக் கொண்டு தா

---

எனது கண்— "உபாத்தஸார: சக்ஷுஷா மே ஸ்வவிஷய:" என்பது மூலம். "தனக்குப் புலனாகும் மாளவிகையின் புன்னகை என்ற ஸாராம்சத்தை எனது கண் கிர்ஹித்தது." எனச் சிலர் கருத்துக் கூறுவர். "கண்ணுக்குப் புலனாகக் கூடிய பொருள்களுள் இப்போதைய நிலைமையிலுள்ள மாளவிகையின் முகமே சிறந்தபொருள். அதனை இந்தக் கண் கண்டதன்றோ." எனப் பொருள் கொள்வது நன்கு பொருந்தும்.

பற்கள்— இக்கருத்தை தண்டியலங்காரம் வாக்கியார்த்த உவமையிலும் காண்க.

னே அளவிடக்கூடும். நீர் அபிநயம் நன்றாயிருப்பதாகச் சொல்லிவிட்டீர். ஆகையால் இவளுக்கு இதனைப் பரிசாக அளிக்கின்றேன்.

(அரசனுடைய கையிலிருந்து வளையைக் கழற்றத் தொடங்குகின்றான்.)

அரசி—நிற்க, நிற்க. பண்பறியாத நீ எதற்காக ஆபரணத்தைக் கொடுக்கலுற்றாய்?

விதூஷகன்— பிறருடையது என்றே.

அரசி— (ஆசிரியனைப் பார்த்து) ஆரிய கணதாஸரே, தங்களுடைய மாணவி உபதேசத்தைக் காட்டிவிட்டாளல்லவா?.

கணதாஸன்— பெண்ணே, இப்பொழுது புறப்படுக.

[மாளவிகை ஆசிரியனுடன் சென்றாள்.

விதூஷகன்— (அரசனைப் பார்த்து, ரகஸியமாக) தங்களை ஸந்தோஷப்படுத்துவதில் என் புத்திக்குள்ள வல்லமை இவ்வளவே.

---

நிற்க; நிற்க— விதூஷகனது இந்த அடாச்செயலைத் தாரிணி எவ்வாறு பொறுக்கமுடியும். விதூஷகன் இவ்வளவு தூரம் மாளவிகைவிஷயத்தில் சிரத்தை வைத்து அவளை அரசனது முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தியதோடு நிற்காமல், அரசனது வளையையும் கொடுக்க முயல்வது, துணிவுள்ள காரியமே. "விவாஹகாலத்தில் நாயகன் நாயிகைக்கு மோதிரம் வளை முதலிய ஆபரணங்களைக் கொடுக்கவேண்டும்." என்று ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கின்றது. இதனை மனத்திற்கொண்டுதான் நமது மஹாகவி சாகுந்தளத்தில் மோதிரத்தையும் இங்கு வளையையும் முன்பாகவே பிரஸ்தாவத்திற்குக் கொண்டுவந்திருக்கின்றார். வழக்கத்தில் வரும் இந்த ஸ்மிருதிமுறையை விதூஷகனும் அறிந்திருக்கக் கூடும்.

பிறருடையது— இது வெளிப்படையில் ஒரு பரிஹாசப் பேச்சு. "இனி அரசர் மாளவிகையையும் கைப்பற்றப் போவது நிச்சிதமாகையால் அவர் அப்போது கொடுக்கவேண்டிய ஒரு பொருளுக்கு இப்போதே உரிமை மாளவிகைக்கு ஏற்பட்டுவிட்டது. பிறருடைய பொருள் பிறரையே சாரவேண்டுமன்றோ. ஆதலால்தான் அதனைக்கொடுக்கமுயல்வது.' என்பது விதூஷகனது உட்கருத்தாகலாம்.

தங்களை—அரசன் தன்னைப் புகழ்ந்து நல்ல வார்த்தையைச் சொல்லவேண்டுமென்று விரும்பியே விதூஷகன் இவ்வாறு பேசுகின்றான்.

**அரசன்**— (ரகஸியமாக) வேண்டாம், வரையறுத்துக் கூறவேண்டாம். இப்பொழுதோ,

இந்த மாளவிகை திரையினுட் சென்று மறைந்தது, கண்களின் பாக்கியம் போய்விட்டாற்போலவும், என் மனத்தின் பெருமகிழ்ச்சி முடிவுற்றாற்போலவும் என் தைரியத்தின் வழி யடைபட்டாற் போலவும் எனக்குத் தோன்றுகின்றது.

**விதூஷகன்**— நன்று நன்று!. வறிய நோயாளி, வைத்தியனுடைய செலவில் மருந்தை விரும்புவது போலிருக்கின்றது தங்களது விருப்பம்.

(பிரவேசித்து)

**ஹரதத்தன்**— பிரபுவே, எனது உபதேசத்தைப் பார்க்க அருள் புரியவேண்டும்.

**அரசன்**— (மனத்துள்) காணவேண்டியதைக் கண்டாய்விட்டது. (தாக்ஷிண்யத்துடன், வெளிப்படையாக) ஹரதத்தரே, நாம் ஆவலுள்ளவர்களாகவே இருக்கின்றோம்.

**ஹரதத்தன்**— இஃது எனக்குப் பேரருளே.

(திரையினுட்புறத்தில்)

**வைதாளிகன்**— பிரபுவே, தேவரீருக்கு மேன்மை மேன்மேலும் ஓங்குக. ஸூரியன் உச்சிக்காலத்திலிருக்கின்றான். ஆம், அவ்வாறே—

அன்னங்கள், வாவியிலுள்ள தாமரை இலைகளின் நிழல்களில் தங்கிக் கண்களை மூடிக்கொண்டிருக்கின்றன. மாடங்கள் மிகு வெப்பங்கொண்டமையால் புறக்கள் அங்குள்ள கொடுங்கைகளினின்று அகன்றிருக்கின்றன. மயில்கள் நீர்த்திவலைகளைக் கொள்ளக் கருதிச் சுற்றிக் கொண்டிருக்கும் ஜல யந்திரத்தை அணுகுகின்றன. தாங்கள் அரசர்க்கு உரிய குணங்கள் எல்லாம் பொருந்தி விளங்குவதைப்போல, ஸூரியன் எல்லாக் கிரணங்களையும் ஏற்றுத் துலங்குகின்றான்.

---

ஆவலுள்ளவர்களாகவே— "நநு பர்யுத்ஸுகா ஏவ வயம்" என்பது மூலம். ஔத்ஸுக்யம் எனப்படும் பேரவா உண்மையில் மாளவிகையிடம் அரசருக்கு உண்டல்லவா. அதும் பொருந்துமாறு பொதுவாகப் பேசியிருக்கின்றான் அரசன்.

**விதூஷகன்**— ஹா ஹா ; அரசர் நீராடி உண்ணும் ஸமயம் வந்துவிட்டது. உரிய காலத்தை மீறி நடப்பது குற்றமென வைத்தியர்கள் கூறுகின்றார்கள். ஹரதத்தரே, என்ன சொல்கின்றீர்.

**ஹரதத்தன்**— நான் வேறு வார்த்தை கூற இடமில்லையே.

**அரசன்**— (ஹரதத்தனைப் பார்த்து) எனவே, உமது உபதேசத்தை நாளைக்குப் பார்ப்போம். இன்று நீர் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்.

**ஹரதத்தன்**— பிரபுவின் ஆணைப்படி.

[சென்றான்.

**அரசி**— ஐயர் நடுப்பகலுக்குரிய காரியங்களைச் செய்யத்தொடங்கலாமன்றோ.

**விதூஷகன்**— தேவி, உண்டியை விசேஷமாக விரைவில் ஸித்தப்படுத்துக.

---

வைதாளிகன்— அந்த அந்த யாமத்திற்குரிய ராகத்தில் தாளமில்லாமல் காலத்தைக் குறிக்கும் செய்யுளைப் பாடுபவன் "வைதாளிகன்" எனப்படுகின்றான். பெரும்பான்மையாக மற்றை நாடகங்களில் வைதாளிகனைப் புகுத்துவது அந்த அங்கத்தை முடிப்பதற்காகவே யிருக்கும். நமது கவியின் நாடகங்களிலோ, வைதாளிகன் வருவது பெருத்ததொரு பயனைக்கருதியேயிருக்கும். இங்கு ஹரதத்தனுடைய உபதேசத்தைக் காண இடங்கொடுக்காதிருப்பதற்காகவே வைதாளிகனை நமது கவி அழைத்திருக்கின்றார். இராவதியின் நாட்டியத்தைக் காணவோ, ஹரதத்தனது கற்பிக்கும் திறமையைப் புகழவோ, அரசனுக்கும் மற்றவர்களுக்கும் ஸபையோருக்கும் உண்மையில் விருப்பம் இருக்கமாட்டாதன்றோ.

அன்னங்கள்— அரசனை ஸூரியனோடு ஒப்பிட்டிருப்பதை, விக்ரமோர்வசீயத்திலும் வைதாளிகவசனத்தில் காண்க.

தேவி— "பவதீ விசேஷேண பானபோஜனம் த்வரயது" என்பது மூலம். "விசேஷேண" என்பதை "த்வரயது" என்பதோடு சேர்த்து "அதிவேகத்தில் உண்டியை ஸித்தப்படுத்துக" என்று பொருள் கூற வேண்டும். இது வெளிப்படையான கருத்து. "விசேஷேண" என்பதை "பானபோஜனம்" என்பதோடு சேர்த்தால் "சிறந்த உண்டியைஸித்த

**பிக்குணி**— (எழுந்து) பிரபுவே, க்ஷேமம் உண்டாவதாக.

[பிக்குணியும் அரசியும் பரிஜனங்களும் சென்றார்கள்.

**விதூஷகன்**— மாளவிகை அழகில் மட்டும் நிகரற்றவளல்லள், கலையிலும் நிகரற்றவளே.

**அரசன்**— நண்ப,

பிரமதேவர் இயற்கையழகியாகிய இந்த மாளவிகைக்கு இனிய கலைஞானத்தையும் சேர்த்திருப்பது, காமன் கணைக்குக் கடும் விஷம் பூசியதேயாம்.

பலவாறு பேசிப் பயன் என்? என்னைப்பற்றிய நினைவு உனக்கு இருக்கவேண்டும்.

**விதூஷகன்**— தாங்களும் என்னை மறக்கலாகாது. அங்காடி வீதியில் வறுப்பதற்குள்ள சட்டியைப்போல எனது வயிற்றினுட்புறம் எரிகின்றது.

**அரசன்**— நீ நண்பனுடைய காரியத்தில் இவ்வாறே விரைந்து நிற்கவேண்டும்.

**விதூஷகன்**— ஒருப்பட்டுவிட்டேன். என்றாலும், மேகத்தால் மறைக்கப்பட்ட நிலவைக் காண்பதுபோல, பிறர்வசத்திலிருக்கும் மேன்மையுள்ள மாளவிகையைக் காண்பதும் அரிதாயிருக்கின்றது. தாங்களோ, சூலத்தின்மீது வட்டமிடும் பருந்துபோல ஆமிஷத்தில் ஆசையும் பயமும்

---

ப்படுத்துக" என்பது கருத்து. இன்று அரசருக்கு விவாஹமஹோத்ஸவபூர்வமங்களமாகையால், அதற்குத் தக்கவாறு போஜனம் இருக்கவேண்டுமல்லவா என்ற கருத்துடன், அரசனையும் பரிஹஸிக்கக் கருதி இவ்வாறு விதூஷகன் பேசினன் எனக் கொள்ளலுமாம். இது மொழிபெயர்ப்பிலும் பொருந்தும்.

இவ்வாறே— "இப்பொழுது நடந்துகொண்டதைப் போலவே' என்பது ஒரு கருத்து. உண்டியில் உனக்கிருக்கும் மனவேகம் நண்பனது காரியத்திலும் வேண்டும் என்பது மற்றொரு கருத்தாம்.

ஆமிஷம்— ஆமிஷபதத்திற்கு மாம்ஸம், அனுபவிக்க விரும்பப்படும் பொருள், என்ற இரண்டர்த்தங்களையும் இங்குக் கொள்க. சூலத்தி

கொண்டிருக்கின்றீர்கள். ஆசையால், தாங்கள் ஆற்ருமையை வெளிக்காட்டாமல் அமைதியுடனிருந்து காரியத்தை நிறைவேற்றப் பார்ப்பதுதான் எனக்குப் பிடிக்கின்றது.

**அரசன்—** ஆற்ருமையற்றிருப்பது எங்ஙனம்?. எனெனில்,

எனது மனம் அந்தப்புர ஸ்திரீகள் எல்லாரிடமிருந்தும் திரும்பிவிட்டமையால், கண்ணழகியான அந்த மாளவிகை ஒருவளே என் அன்பு முழுவதுக்கும் தங்குமிடமாயினள்.

[எல்லாரும் செல்கின்றனர்.

இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

## மூன்றும்[1] அங்கம்.



(பிறகு பிக்ஷுணியின் வேலைக்காரி பிரவேசிக்கின்றள்.)

**வேலைக்காரி—** அரசிக்குக் கையுறை வழங்க மாதுளம்பழம் ஒன்று கொண்டு வரும்படி பகவதியார் எனக்குக் கட்டளையிட்டார். ஆகையால் பிரமதவனத்தில் காவல் புரியும் மதுகரிகையைக் காணத் தேடுகின்றேன். (நடந்து, பார்த்து)

---

லேற்றிய சவத்தைத் தின்ன, ஆசையால் சூலத்தின்மீது வானத்தில் பருந்து வட்டமிடும். அடுத்து வந்து தின்னவும் அஞ்சும்.

இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

அரசிக்கு—கையுறை—பரிசு, காணிக்கை. சில புஸ்தகங்களில், பிக்ஷுணி அரசனைக் காணப்போவதாகப் பாடமிருக்கின்றது. இது பொருந்தாது. பிக்ஷுணிக்கு அரசனைக் காணக் காரணமிருப்பதாகத் தெரியவில்லை. வஸந்தோத்ஸவகாலத்தில் வெறுங்கையாக அரசியைக்காணலாகாது என்பது பொருந்தும். அல்லது இந்த உத்ஸவகாலத்தில்

அதோ அவள் ஸுவர்ண அசோக மரத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கின்றாள். அவளண்டை செல்கின்றேன்.

(பிறகு பூங்காவனக் காவற்காரி பிரவேசிக்கின்றாள்.)

**பரபிருதிகை**— (அருகு சென்று) மதுகரிகே, தோட்டத்தொழில் உனக்கு இனிதாயிருக்கின்றதா ?.

**மதுகரிகை**— ஓ ஹோ, பரபிருதிகையா ?. தோழி, உன் வரவு நல்வரவாகுக.

**பரபிருதிகை**— "நம்மைப் போன்றவர் வெறுங் கையுடன் மேன்மை தங்கிய அரசியைக் காணலாகாது. ஆதலின் மாதுளம் பழத்துடன் கோப்பெருந்தேவியைக் காணக் கருதுகின்றேன்." எனப் பகவதியார் கட்டளையிடுகின்றார்.

**மதுகரிகை**— இதோ அடுத்துத் தொங்குகின்றதே மாதுளம் பழம். நாட்டியாசாரியர் இருவரும் தம்முள் பொறாமை கொண்டு வாது செய்தார்களே ; இவர்களுள் எவருடைய உபதேசத்தைப் பகவதியார் ஒப்பிப் புகழ்ந்தனர் ?.

**பரபிருதிகை**— இருவரும் சாஸ்திரத்திலும் அபிநயத்திலும் திறமையுள்ளவர்களே. ஆயினும் மாணாக்கியின் சிறந்த திறமைகொண்டு கணதாஸர் தாம் உயர்ந்தனர்.

**மதுகரிகை**— இஃது இருக்கட்டும். மாளவிகையைப் பற்றி என்னமோ பேசிக் கொள்கின்றார்களே ; அந்த விஷயம் எப்படி ?.

---

பிக்குணியும் அரசனைக் காணக்கருதலாம். சில புஸ்தகங்களில் "ஸமாபிருதிகை" என்று வேலைக்காரியின் பெயர் காணப்படுகின்றது. பரத சாஸ்திரத்தில் கூறியபடி "மதுகரிகை" என்ற பெயருக்கு அனுகுணமாக "பரபிருதிகை" என்றிருப்பதுதான் எற்றது.

**இருவரும்**— இதனால் ஹரதத்தனுடைய உபதேசமும் பரீக்ஷிக்கப்பட்டதாகத் தெரிகிறது. "ரஸமில்லாத பாகத்தை ஆடிக் காட்டவேண்டாம்." என்ற பரத சாஸ்திர முறைப்படி இங்கு ஹரதத்தன் விஷயத்தை அரங்கத்திற்குக் கொண்டு வாவில்லை எனக் கொள்க.

பரபிருதிகை— அரசர் அவளிடம் ஆழ்ந்த காதலுள்ளவராயிருக்கின்றார். ஆயினும், தாரிணிதேவியாரது மனம் நோகக்கூடாது என்று எண்ணித் தமது ஸ்வாதந்திரியத்தைக் காட்டவில்லை. இந்நாள் மாளவிகையும், சூடிக் கழற்றியெறியப்பட்ட ஜாதிப் பூமாலையையொப்ப மிகவும் வாடியவளாகக் காணப்படுகின்றாள். இதற்கப்புறம் எனக்குத் தெரியாது. நான் போக அநுமதி கொடு.

மதுகரிகை—இந்தக்கிளையில் தொங்கும் மாதுளம் பழத்தைப் பறித்துக் கொள்.

பரபிருதிகை— (பறித்ததாக அபிநயித்து) ஸகி, பெரியாருக்குப் பணிவிடை செய்வதின் பயனை இன்னமும் சிறப்பாய் நீ அடைவாயாக.

[புறப்படுகின்றாள்.

மதுகரிகை— தோழி, இதோ நிற்கும் ஸுவர்ண அசோக மரம் நாளாகியும் பூக்காதிருக்கின்றமையால், இதற்கு வளமிடவேண்டுமென்று தேவியாரிடம் தெரிவிக்கப் போகின்றேன். நாம் இருவரும் சேர்ந்து போகலாமே.

பரபிருதிகை— ஆம். நியாயமே. உனது வேலையன்றோ அது.

பிரவேசகம் முற்றிற்று.

---

அரசர்— "ப்ரபுத்வம் ந தர்சயதி" என்பது மூலம். சிலர் "ப்ரபுத்வம் தர்சயதி" என்ற பாடத்தை ஆதரித்து, "தாரிணியின் மனம் நோகக்கூடாதெனக் கருதித், தம் விஷயத்தை மறைப்பதில் ஸாமர்த்தியத்தைக் காட்டுகின்றார்" எனக் கருத்துக் கூறுவர்.

பறித்ததாக— இது வேஷம் பூண்டவர்களின் செய்கையாதலின், "நாட்யேன க்ருஹீத்வா— பறித்ததாக அபிநயித்து" என்று கூறுவது வழக்கம்.

தோழி— "தோஹத (தௌஹ்ருத) நிமித்தம்" என்பது மூலம். "மரம் செடி கொடி முதலியவற்றை அகாலத்திலும் பூக்கச் செய்ய உபயோகிக்கும் ஒருவித ஸம்ஸ்காரம் (பண்படுத்தல்) தோஹதம் எனப்படும்." என்று லக்ஷணம் கூறப்பட்டிருக்கின்றது. இதனை நாம் "வளம்" என்று மொழிபெயர்த்தோம். "உரம்" எனவும் கூறலாம்.

பிரவேசகம்— இது விஷ்கம்பம் போலவேயாம். ஆனால் பாத்திரங்கள் நீசர்களாவர். இதனை முதலங்கத்தில் உபயோகிக்கக்கூடாது.

(பிறகு காமியின் நிலைமையிலுள்ள அரசனும், விதூஷகனும் பிரவேசிக்கின்றனர்.)

*அரசன்*— (தன்னைப் பார்த்து)

அன்பிற்குரிய அன்னவளை அணைந்து ஆனந்தம் அடையாமையால் எனது உடலம் இளைத்துப் போகலாம். கணப்போழுதேனும் காதலியைக் காணுமையால் எனது கண் நீர் பெருகி நிற்கலாம். எ மனமே, நீயோ ஒரு போழுதும் அந்த மானேய் நோக்கியாளை விட்டுப் பிரியவில்லை. ஆகையால் நீ பேருவகையைப் பெறவேண்டியிருக்க, அதற்கு மாருக ஏன் இவ்வாறு தாபப் படுகின்ருய் ?.

**விதூஷகன்**— தாங்கள் தைரியத்தை விட்டு இவ்வாறு புலம்பலாகாது. மேன்மையுள்ள மாளவிகையின் அருமைத் தோழியாகிய வகுளாவலிகையைப் பார்த்தேன். தாங்கள் அவளிடம் சொல்லச்சொன்னதையும் சொல்லியிருக்கின்றேன்.

**அரசன்**— பிறகு அவள் என்ன சொன்னுள் ?

**விதூஷகன்**—"இவ்வாறு கட்டளையிட்டது, என்னிடம் காட்டிய பேரருளே. தேவியார், இரங்குதற்குரிய இம்மாளவிகையை இப்பொழுது மிகு உறுதியுடன் பாதுகாத்து வருகின்ருர். ஆதலின், பாம்பு காக்கும் ரத்தினத்தைப் போன்ற இவளை எளிதிற் பெறமுடியாது. ஆயினும் நான் காரியம் கைகூடப்பாடு படுவேன்." என்று தங்களிடம் சொல்லச் சொன்னுள்.

**அரசன்**— மன்மத பகவானே, தடையுள்ள விஷயங்களில் என்னை ஆழஇறக்கிச் சிறிதுகாலம் கூடப் பொறுத்திருக்க

---

காமியின்— "நடன் அபினயிப்பதால் இவ்வாறு கூறப்பட்டது."

அன்பிற்கு— எப்பொழுதும் மாளவிகையைப்பற்றிய நினைவே நிற்பதால் உடலம் இளைக்கின்றது. கண்ணீர் பெருகுகின்றது. இதற்குப் பரிஹாரம் அவளை அணைவதும் காணுவதுமே என்பது கருத்து. இத்தகைய ஸந்தர்ப்பத்தில் இப்படி உடலுக்கும் உள்ளத்திற்கும் வாசி வைத்துப் பேசுவது காளிதாஸரது வழக்கமென்பதைச் சாகுந்தளாதிகளிலும் காண்க.

மன்மதபகவானே— "கிடைத்தற்கரிய விஷயத்தில் ஆழங்கார்படு

முடியாதவனுகச் செய்து வருத்துகின்றுயே. (வியப்புடன்)

நெஞ்சைப் பிளக்கும் இந்த நோவு எங்கே ? நம்புதற்குரிய உனது ஆயுதம் எங்கே ? "மெல்லிய வஸ்து, மிகு கடினமாயிருப்பதுண்டு" என்று சொல்வது, உன்னிடம் கண்கூடாகக் காணப்படுகின்றது.

விதூஷகன்— நான் அந்தக் காரியம் கை கூடுவதற்குள்ள வழியில் இறங்கியிருப்பதாகச் சொல்லுகின்றேனே. அது கொண்டு மனத்தை அடக்கி அமைதியாயிருங்கள்.

அரசன்— உரிய காரியங்களிலும் எனது உள்ளம் செல்வதில்லை. இந்நிலைமையில், பாக்கிப் பகலை நான் எங்குச் சென்று எவ்வாறு கழிப்பேன்.

விதூஷகன்— இராவதி, வஸந்தருதுவின் வரவை அறிவிக்கும் செவ்வசோகமொட்டுக்களைத் தங்களுக்குக் கையுறையாக அனுப்பிக் காமத்திருவிழாவை முன்னிட்டுத் தங்களு

---

த்துவான் மதனன்" என்று விக்ரமோர்வசீயத்திலுமுண்டு. "யதா ஜஞேயம் காலாந்தர க்ஷமோ ந பவதி" என்பது மூலம். "வெகு காலம் ஜீவிக்காதபடி செய்கின்றுய்" என்பது நீலகண்டனது சிற்றுரை.

நெஞ்சை— பூ, மெல்லியதாகையால் ஒன்றும் செய்யாது என்று யாவரும் நம்பக்கூடும். "சில வஸ்துக்கள் உருவத்தில் மெல்லியன வாயிருப்பினும், காரியத்தில் இடியைப் போல வெகு கடினங்களாகின்றன." என்று உலகத்தார் பேசுவதைக் கேட்டிருக்கின்றேன். அதன் உண்மையை இப்பொழுது அனுபவத்தில் அறிந்துகொண்டேன் என்பது கருத்து. இச்செய்யுளின் கருத்தை "தவ குஸுமசரத்வம்" என்ற சாகுந்தளச் செய்யுளிலும் காண்க. "மிருதுவான வஸ்து மிருதுவான பதார்த்தத்தைக் கொண்டே தாக்கப்படுகின்றது. தாமரைப் பொய்கையை அழிக்கப் பனியன்றோ கருவியாக நிற்கின்றது." என்ற கருத்துள்ள ரகுவம்சம் எட்டாம் ஸர்க்கம் நாற்பத்தைந்தாம் சுலோகமும் இங்கு நினைக்கற்பாலது. "கரும்பு வில்லும், சுரும்பு நாணும், அரும்பு கணையுமாக நின்று உலகத்தை வெல்கின்றுன் காமன்" என்பது கவிகளது கொள்கை. குமாரஸம்பவம் முதல் ஸர்க்கம் நாற்பத்தொன்றும் செய்யுளுக்கு நாம் எழுதிய குறிப்பையும் காண்க.

வஸந்தருது— இங்ஙனமுள்ள ஸந்தர்ப்பம்,இதே ரீதியில் விக்ரமோர்வசீயத்திலு மிருப்பதைக் காண்க. ஸ்ரீகாளிதாஸருடைய காவிய

டன் ஊசலாட வேண்டுமென்று நிபுணிகைமூலமாகத் தங்களை வேண்டிக்கொண்டாளல்லவா?. தாங்களும் அதற்கு உடன்பட்டுச் சொல்லியனுப்பினீர்களே. ஆகையால், நாம் பிரமதவனத்திற்குப் போகலாமே.

**அரசன்**— இஃது ஏற்றதல்ல.

**விதூஷகன்**— ஏன் ?

**அரசன்**— நண்ப, இயற்கையாகவே மதிநுட்பமுடையவர்கள் மாதர்கள். ஆகையால், உனது தோழியாகிய இராவதியை நான் எவ்வளவு சிறப்பாகக் கொண்டாடினாலும், அவள், என் மனம் வேறொருத்தியிடம் பாய்ந்திருப்பதைக் கண்டறியாதிருப்பாளா ? ஆதலின் எனக்குத் தோன்றுகிறது—

அவ் வேண்டுகோள் உசிதமாயினும், அதனைத் தட்டுவது தான் சிறிதேனும் நன்று. கண்டனத்திற்குரிய பல காரணங்களும்இப்பொழுது(என்னிடம்)காணப்படுகின்றன.மானமேற்ற மங்கையரை முன்னிலும் சிறப்பாகக் கொண்டாடினும், உள்ளன்புமட்டும் இல்லாவிட்டால், அக்கொண்டாட்டம் அவர்களுக்கு உண்மையில் உபசாரச் செயலாக மாட்டாது.

---

ங்களிலும் நாடகங்களிலும் வஸந்தவர்ணனை இராமலிராது. இந்த நாடகத்திலும் விக்ரமோர்வசியத்திலும் பூர்வானுராக விப்ரலம்ப காலத்தில் வஸந்தனை நமது மஹாகவி அழைத்திருக்கின்றார். சாகுந்தளத்தில் மட்டும் விப்ரலம்ப (கலந்தபின் பிரிவு) காலத்தில் வஸந்தனை அழைக்கின்றார். வால்மீகியின் உண்மைச் சிஷ்யரான நம் மஹாகவி ஸ்ரீராமாயணத்திலுள்ளதைப் பின்பற்றியே தாமும் அவ்வாறு செய்திருக்கின்றார். அவ்வாறு சாகுந்தளத்தில் செய்வதற்குள்ள மற்றைக் காரணங்களை சாகுந்தளக் குறிப்பில் கூறுவோம்.

நண்ப— "ஸ்த்ரீணும் அசிக்ஷிதபடுத்வம்" என்று சாகுந்தளத்திலுமுண்டு. "தே ஸகீ" என்பது மூலம். தோழனது மனைவியையும் தோழி என்று பேசுவதுண்டு. இதனைப் பாரதத்திலும் விஷ்ணுபுராணத்திலும் காணலாம்.

அவ்வேண்டுகோள்—"உசித: ப்ரணயோ வரம் விஹந்தும்" என்பது மூலம். "அவ்வேண்டுகோளை நிராகரிப்பது தான் உசிதமானது. இ

**விதூஷகன்**— தாங்கள், அந்தப்புர ஸ்திரீகளிடம் நன்கு வுன்றிய தாக்ஷிண்யம் முழுதையும் ஒரேயடியிற் புறக்கணிப்பது தகாது.

**அரசன்**— (ஆலோசித்து) அவ்வாருயின், பிரமதவனத்திற்குப் போகும் வழியைக் காட்டுக.

**விதூஷகன்**— தாங்கள் இவ்வழி வரவேண்டும், இவ்வழி வரவேண்டும்.

[ இருவரும் செல்கின்றனர்.

**விதூஷகன்**— இந்தப் பூங்கா, காற்றில் அசையும் தளிர்கள் என்னும் விரல்களால் தங்களை விரைந்துவரும்படி அழைக்கின்றது போலும். ஆதலின், தாங்கள் உட்செல்லுங்கள்.

**அரசன்**— (காற்றுத் தன்மீது பட்டதால் உண்டான ஸுகத்தை அபினயித்துக்காட்டி) நற்பிறப்பாளனன்றே வஸந்தன். தோழ, பார்—

இவ் வஸந்தன், மதம்பூண்டு செவிக்கினிதாமாறு கூவும் குயில்களுடைய தீங்குரல்களைக் கொண்டு "காமநோய் உன்ஞல் பொறுக்கக் கூடியதாயிருக்கின்றதா?" என்று என்னைப் பரிவுடன் வினவிவிட்டுத், தன் கையால் என் அங்கத்தைத் தடவிக் கொடுப்பவன்போல, மாம்பூமணம் வீசும் தென்றலை என் உடம்பெங்கும் நன்கு படுமாறு உபயோகிக்கின்ருன்.

**விதூஷகன்**— வாருங்கள். உள்ளம் குளிர உட்செல்வோம்.

( இருவரும் உட்செல்கின்றனர். )

---

து சிறிதாயினும் நன்று." என்றும் மொழிபெயர்க்கலாம். "பஹ்வ: கண்டனஹேதவோத்ய (ஹி) த்ருஷ்டா:" என்பது மூலம். கண்டனம் = கடிதல், வெறுத்தல். "தனது நாயகனுடைய தவறுதல்களைக் கண்டு கோபங்கொள்பவள், க (வ) ண்டிதை என்ற நாயகியாவாள்." என்று அலங்காரசாஸ்திரம் கூறும். மாளவிகையிடமே தன் மனம் சென்றிருப்பதால் தனது சரீரம் இளைத்திருப்பதையும் நித்திரையில்லாமல் கண் சிவந்து கலங்கியிருப்பதையும் கண்டு, இராவதி தன்னைக் கண்டிக்கக் கூடுமென்கிருன் அரசன். "த்ருஷ்டா:" என்றிருப்பதால், "இராவதி முன்பே உடலிளைப்பு முதலிய கண்டனகாரணங்களை அறிவாள்" எ-

**விதூஷகன்**— தோழ, ஊன்றிப் பாருங்கள். இந்த உத்தியான லக்ஷ்மி, தங்களது மனத்தை மயக்கக் கருதி, வஸந்த காலத்துப் பூக்களைக்கொண்டு, மங்கையரும் கண்டு நாணுமாறு கோலஞ் செய்துகொண்டிருக்கின்றாள்.

**அரசன்**— ஆம்; வியப்புடன் காண்கின்றேன்.

சேவ்வசோகப்பூ, கோவைக்கனிபோன்ற உதட்டில் எழுதும் செம்பஞ்சுக் குழம்பினைவிடச் சிறந்த காந்தி பெற்று விளங்குகின்றது. பசுத்தும் வெளுத்தும் சிவந்துமுள்ள குரவ கமலர், மகரிகாதி பத்திரலேகையை மறுப்பதாயிருக்கின்றது. வண்டாகும் மை பதிந்த திலகப்பூ, பொட்டின் நிலையைப் பிடித்துக் கொண்டிருக்கின்றது. எனவே, முகக் கோலம் செய்துகொள்வதில் வஸந்த லக்ஷ்மிக்கு அங்கனைமாரிடம் அவமதிப்பு இருப்பதாகத் தோன்றுகிறது.

(இருவரும் பூங்காவின் அழகைப் பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.)

---

ணக் கொள்ளல் வேண்டுமென்பர். மானம்—"தலைவன் தலைவியர் தம்முள் ஒருவர்க்கொருவர் கொண்ட பேரன்பின் காரணத்தானும் பொறாமை காரணத்தானும் எழூஉம் ஒருவகைச் சிறு கோபத்திற்கு மானமென்று பெயர். இது பிரணயமானமென்றும் இருடிய மானமென்றும் இருவகைப்படும். பிரணயமானம்—காரணமின்றிப் பேரன்பின் மேலீட்டால் உண்டாகும் சிறுகோபம். இஃது ஊடல் என்றும் பெயர் பெறும். இருடியமானம்—தனது தலைவன் மற்றொரு நாயகியினிடத்தில் இச்சைகொண்டானென்று தெரிந்தபோழ்தும் அன்னணம் ஆசங்கை கொண்டபோழ்தும் உண்டாகும் பொறாமையானெழுந்த கோபமாம்" என நாடக வியலுரையில் கூறப்பட்டிருக்கின்றது. இந்தக் கருத்தை "ப்ரியவசனசதோபி" என்ற விக்ரமோர்வசீயச் செய்யுளிலும் காண்க. "உபசாரமாவது இடத்தையும் காலத்தையும் அனுஸரித்து, இஷ்டப்படி ஆடை ஆபரணம் சந்தனம் பூமாலை முதலியவற்றைக் கொடுத்துக் காதலியைக் கொண்டாடுவதேயாம்" என்பது உபசாரத்தின் லக்ஷணம்.

உத்தியானலக்ஷ்மி—உத்தியானலக்ஷ்மியாவது உத்தியானசோபை. இந்தப் பதம் பெண்பாலாகையால், இந்த லக்ஷ்மியை ஒரு பெண்ணாக நாம் பாவிக்கவேண்டும். இஃகுக் குமாரஸம்பவம் மூன்றாம் ஸர்க்கம் முப்பதாம் செய்யுள் நினைக்கற்பாலது.

செவ்வசோகப்பூ—குரவகமென்பது—செம்பூவுள்ள பெருங்குறிஞ்சி என்றும், செம்பூவுள்ள முள் குறிஞ்சி என்றும் கூறுவர். "இதழின்

(பிறகு மையலேறிய மாளவிகை பிரவேசிக்கின்றாள்.)

மாளவிகை— பிரபுவின் மனமறியாமல், அவரிடம் நான் காமுற்றதைப் பற்றி நினைக்கும்போது எனக்கே வெட்கமுண்டாகிறது. இவ்வாறிருக்க, இந்தச் செய்தியை எனது பிரியஸகியிடம் தெரிவிக்க எனக்குத் துணிவு வருமோ?. காமன், பரிஹாரமற்ற இத்தகைய பெரும் வாதனைக்கு என்னை எத்துணைக் காலம் ஆளாக்கப் போகின்றானோ; யான் அறியேன். ( சில அடிகள் வைத்து ) நான் எங்குப் புறப்பட்டேன்?. (ஆலோசித்து) ஓஹோ, நினைவு வந்தது. " அடி-

---

வெளிப்புறம் பச்சையாயும், உட்புறம் வெளுத்தும் தாது சிவந்துமிருக்கும் இம்மலர்" என்பது ஒருரை. எங்குமே இம்மூன்று நிறங்கள் கலந்திருக்கலாம். இவ்வாறான மலர்களை நாம் காண்கின்றோம். ஆதலின், மூன்று நிறங்களுக்குந் தனித்தனியாக மூன்று இடங்கள் அமைக்கவேண்டியதில்லை. " குரவகமலர்கள் தனித்தனியாக மூன்று நிறங்களிலுமுண்டு. எல்லாவற்றையும் சேர்த்தும், 'குரவகம்" என்று ஒருமையை ஜாதியில் வைத்தும் "குரவகம் ச்யாமாவதாதாருணம்"என்று மஹாகவி கூறினார்" என்று சிலர் கூறுவர். "தளிருடனும் இலையுடனும் கூடிய பூவை இவ்வாறு கூறினார். தளிர் சிவந்தது, இலை பசுத்தது, பூ வெளுத்தது" என்பது வேறு சிலரின் கருத்து. " அக்ரே ஸ்த்ரீநகபாடலம் குரவகம் ச்யாமம் த்வயோர்பாகயோ:" என்று விக்ரமோர்வசீயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இரு பக்கங்களிலும் சியாமமாயும், நுனியில் சிவந்ததாயுமிருப்பதாக இக்குரவகமலர் அங்கு வர்ணிக்கப்படுவதை அனுஸரித்து, இதழின் இருபுறங்களும் பசுத்தும் அல்லது கருத்தும், நுனியில் சிவந்தும், இடையில் ஆங்காங்கு வெளுத்துமிருக்கும் இம்மலர் எனக்கொள்வது சிறந்தது. குமாரஸம்பவத்திலுள்ள முகபதம்போல இங்கும் முகபதம், வதனம் ஆரம்பம் என்ற இரு பொருள்களுடையது.

பிறகு—"பர்யுத்ஸுகா மாளவிகா" என்பது மூலம். பர்யுத்ஸுகை என்று உத்கண்டையுள்ளவளைச் சொல்வதுண்டு. உத்கண்டையின் லக்ஷணத்தைப் பின்னர் கூறுவோம். நாயகனைக் காமுற்று, அவனை அடையாமையால் வருந்திக்கவலைப்படுபவளை இவ்வாறு கூறுவது வழக்கு.

மனம்—"பர்த்தாரம் அபிலஷந்தி" என்பது மூலம். வேலைக்காரி பிரபுவை (தலைவனை) விரும்புவது வெட்கத்திற்குத் தானிடமாகுமென்பது கருத்து. "கௌதம சாபலாத்" என்பது மூலம். சாபலமாவது ஆராயாச்செய்கை, அல்லது அடாச் செய்கை. தேவி ஊசலில் உட்கார்ந்து,

மாளவிகே, கௌதமனுடைய தப்பான செய்கையால் நான் ஊசலிலிருந்து நழுவி விழுந்துவிட்டேன். என்னுடைய கால்கள் நோவுபடுகின்றன. ஆகையால் ஸுவர்ண அசோகமரத்திற்கு வளம் கொடுக்க என்னாலாகாது. நீயே அதற்குத் தோஹதம் செய்துமுடி. அந்த மரம் ஐந்து நாள்களுள் பூக்கத் தொடங்கினால், நான் உனது (நடுவில் நெட்டுயிர்த்து) விருப்பம் நிறைவேறுமாறு உன்னிடம் கருணை காட்டுவேன்." என்று தேவியார் எனக்குக் கட்டளையிட்டாரன்றோ. ஆகையால் அந்த ஆஜ்ஞையை நிறைவேற்றவேண்டிய இடத்திற்கு முதலில் நான் போகின்றேன். என் காலுக்குச் செய்யவேண்டிய அலங்காரங்களை எடுத்துக்கொண்டு வகுளாவலிகை உடனே அங்கு வந்து சேருவாள். அவள் வருவதற்குள் நான் தனிமையில் அச்சமற்றுச் சிறிது நேரம் வாய் விட்டுப் புலம்புவேன்.

[செல்கின்றாள்.

---

நழுவி விழாதிருக்கச் சங்கிலி முதலியவற்றைப் பிடித்துக் கொள்வதற்கு முன்பாகவே, விதூஷகன் ஒன்றையும் உய்த்துப்பாராமல் ஊஞ்சலை ஆட்டிவிட்டபடியால் நழுவிவிழ நேர்ந்தது. தேவியாரது மனம் கோகுமாறு மாளவிகை விஷயத்தில் தான் நடந்துகொண்டமையால், அந்தக் குற்றத்தை மெதுவாக மறைக்கக்கருதியும், தேவியின் இப்போதையமனப்போக்கை அறிய விரும்பியும் விதூஷகன் அரசனுடனே தனிமையிலோ அரசியினருகு சென்று தந்திரமாகவும் ஹாஸ்யமாகவும் பலவும் பேசி அரசிக்குத் தன்மீதும் அரசன் மீதுமுள்ள கோபத்தைத் தணித்திருக்கவேண்டும். அரசனும் நயமொழிகளைச் சொல்லியிருக்கவேண்டும். அரசியது மனப்பான்மையும் மாறுபட்டிருக்கவேண்டும். ஆகையால் தான் அரசி, மாளவிகையிடம் கருணை கூரத் தொடங்குகின்றாள். இராவதிபோல இவளும் அரசனுக்குக் காதலியாவதில் அரசிக்கு அதிகம் பொறாமை இப்போது உண்டாகாதிருக்கலாம். அரசனுடைய ஆழ்ந்த காதலைக் கண்டு, "இனி நமது தடை பயன்படாது. எவ்வாற்றானும் அரசர் தம் காரியத்தை நிறைவேற்றிவிடுவர். ஆகையால் நாமே இந்தக் காரியத்தை முடித்துவிடுவோம்." என்று அரசி நினைத்திருக்கக் கூடும். அசோகம் அழகிய நற்குடிமகள் உதைத்தால் மட்டுமே பூக்குமாதலால், இவ்வழியில், அழகிற்சிறந்த மாளவிகையின் குடிப்பிறப்பையும் ஊஹித்தறியலாமென்றும், நற்குடிமகளால் உபத்திரவம் நேரிடாது என்றும் நினைத்து அரசி இவ்

**விதூஷகன்**— (பார்த்து) ஒஹோ ஹோ. மதுவைக் குடித்து மயங்கியவனுக்கு இதோ சர்க்கரை கிடைத்துவிட்டது.

---

வாறு மாளவிகைக்குக் கட்டளையிட்டிருக்கலாம். இவை யாவற்றும் தாரிணியின் உயர்ந்த ஸ்வபாவத்தை விளக்குகின்றன. இங்ஙனமாயின் முதலில் அரசி பொருமைப்பட்டு, மாளவிகையை அரசன் காணுதபடி செய்ததும், நாட்டியமாடாதிருக்கத் தடை செய்யப் பார்த்ததும் பொருந்துமோவெனின், பொருந்தும்—இவை பெண்பாலார்க்கு இயற்கையில் உண்டாகவேண்டுவனவன்ருே. அற்றேல், தாரிணி, ஓரலியாகவல்லவோ ஆகவேண்டும். பின்னர், கணவனது மனப்போக்கை அறிந்து, அதிகம் குறுக்கிடாமல் இயன்றவரையில் உதவி செய்வதன்ருே நற்குடிமகளின் சிறந்த செயற்கைக் குணம். இக்கருத்தை நான்காம் அங்கத்திலும் (மதபேக்ஷானுவ்ருத்த்யா நிவ்ருத்தேர்ஷ்யாயா:) ஐந்தாமங்கம் பத்தொன்பதாம் செய்யுளிலும் நமது மஹாகவியே காட்டியிருக்கின்ருர். மேலே, மாளவிகையைச் சிறையிலடைப்பதும், இராவதியின் பிடிவாதத்தாலேயே என்பது வெளிப்படையன்ருே. "மாளவிகையை ஏமாற்றக் கருதி இவ்வாறு முடியாத காரியத்தைப் புகவிட்டாள் அரசி." எனக் கருத்துக் கொள்வது, கற்பிற்கரசியாகிய தாரிணியிடம் தவறிழைத்தலேயாம். மற்றை நாடகங்களைப் போலன்றித் தனித்தொரு மேன்மை பொருந்தி ஐந்து ராத்திரிகளில் ஆடக்கூடிய ஐந்து அங்கங்களுள்ள இந்த நாடகத்தை, மற்றை அசோகமரங்களைப் போலன்றிப் பூக்காது நின்று பின்பு தோஹதம் பெற்று ஐந்தாம் தினம் பூத்துச் சிறந்ததொரு மேம்பாட்டை அடைந்த ஸுவர்ண அசோகமரத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க நம் மஹாகவி நமக்கு அனுமதி கொடுப்பாராக.

ஒ ஹோ— "ஹீ ஹீ. இயம் க்லு ஸீதுபாநோத்வேஜிதஸ்ய மத்ஸ்ண்டிகா உபநதா" என்பது மூலம். "பக்குவமான கரும்பின் சாற்றினுல் உண்டாக்கப்படும் மத்தியம் "ஸீது" (ஶீது) எனப்படும் என்று வைத்யமாதவம் கூறுகின்றது. மத்ஸ்யண்டிகை என்பது ஒருவகைச் சக்கரையாம். "வாலுகேவ ப்ருஶம் ஸூக்ஷ்மா ஸுஸ்நிக்தா விதபிங்களா. மத்ஸ்யண்டாக்ருதிஸாத்ருச்யயோகாந் மத்ஸ்யண்டிகா ஸ்ம்ருதா." என்பது அதன் லக்ஷணம். மணலையொப்ப மிகச் சிறியதாய், கசிவுள்ளதாய், மஞ்சள் வெளுப்பாய், மீன் முட்டையைப்போல இருக்கும் சர்க்கரை மத்ஸ்யண்டிகை எனப்படும்" என்பது லக்ஷணச் செய்யுளின் பொருள். இஃது இப்பொழுது வழங்கும் அஷ்டக்ராம் சர்க்கரையாயிருக்குமென்று தோன்றுகின்றது. சிலர் கற்கண்டம் (கல்கண்டு) என்கிருர்கள். குடிமயக்கம் நீங்கவேண்டுமாளுல், மத்ஸ்யண்டி

**அரசன்**— அப்பா, இஃது என்னே?

**விதூஷகன்**— கவலையுற்றவள் போலக் குறைந்த கோலத்துடன் மாளவிகை, அதோ ஸமீபத்தில் நிற்கின்ருள்.

**அரசன்**— (ஸந்தோஷத்துடன்) என்ன ? மாளவிகையா ?

**விதூஷகன்**— ஆம்.

**அரசன்**— இனி என் ஆவி நிலைபெறலாம்.

தண்ணீர் விடாயெடுத்த வழிப் போக்கனொருவன், ஸமீபத்தில் நதியொன்று மரங்களின் மறைவிலிருப்பதை அங்கேழும் அன்னப்பறவையின் தொனியால் அறிவானாகில், அப்பொழுது அவன் மனம் எவ்வாறு களிப்படையுமோ; அவ்வாறே என்உள்ளமும்,எனது மனத்திற்கினிய மாளவிகை அடுத்திருப்பதாக நீ சொல்லக் கேட்டறிந்து களிப்படைகின்றது.

இருக்கட்டும் அன்னவள் எங்கே ?

**விதூஷகன்**— மாளவிகை அதோ வரிசையாக அடர்ந்து நிற்கும் மரங்களின் இடையிலிருந்து வெளிக்கிளம்பி இந்தப் பக்கமாகவே வருகிறவளாகக் காணப்படுகின்ருள்.

---

கையை உபயோகிக்கவேண்டும் என்று அஜீர்ணம்ருத மஞ்ஜரியில் கூறப்பட்டிருக்கின்றது. குடியால் நாவிற்கேற்பட்ட துவர்ப்பினை, மதுரச்சுவையுள்ள மத்ஸ்யண்டிகை மாற்றுகிறதென்பது ஒருவரினுரை. குடியால் எற்படும் தோஷத்தை நீக்க மத்ஸ்யண்டிகை எவ்வாறு உபயோகப்படுகிறதோ, அவ்வாறே காமநோயால் வருந்தும் அரசனது துயரத்தை விலக்க மாளவிகையின் வரவு உபயோகப்படுமென்பது கருத்து. "மத்ஸ்யண்டிகை என்பது அடிக்கள்ளாகும். அது வீரியமுடையது. குடிமயக்கங் கொண்டவனுக்கு,வீரியமுள்ள அடிக்கள் எவ்வாறு அதிகம் மயக்கம் கொடுக்குமோ, அவ்வாறே காமநோய் பிடித்த அரசனுக்கு மாளவிகையின் வரவு மேலுமதிக வருத்தத்தை உண்டுபண்ணும்." என்று பலரும் கருத்துக் கூறுவதைக் கேட்டிருக்கின்றோம். மூலத்தில் உள்ள "இயம்" என்னும் சொல்லை மத்ஸ்யண்டிகைக்கு அடைமொழியாக்கி நாம் மொழிபெயர்த்திருக்கும் பிரகாரம் இங்கு அணி, ரூபகாதிசயோக்தியாம். "இயம்" என்பது மாளவிகையைக் குறிப்பதாகச் சிலரின் உரை. அங்ஙனமாயின் அலங்காரம் உருவகமாம். அப்பொழுது "இவள், குடித்து மதமேறியவனுக்கு மத்ஸ்யண்டிகையாக வருகின்ருள்" என்று மொழிபெயர்க்கவேண்டும்.

**அரசன்**— *தோழ, இவளைக் காண்கின்றேன்.*

நிதம்பங்களில் பருத்தும், இடையில் சிறுத்தும், கொங்கைகளில் உயர்ந்தும், கண்களில் பெரிதும் நீண்டுமுள்ள எனது உயிர் இதோ வருகின்றது.

*நண்ப, இவளுடைய நிலைமை நாம் முன்பு கண்டதிலிருந்து மாறுபட்டிருக்கின்றது. ஆம், அவ்வாறே*——

கன்னங்கள் நாணற்கட்டையைப் போல வெளுத்தும் ஆபரணங்கள் குறைந்துமுள்ள இந்த மாளவிகை, வஸந்த காலத்தில் இலைகள் உலர்ந்து வெளுத்தும், பூக்கள் குறைந்துமுள்ள குந்தக்கோடிபோல விளங்குகின்றாள்.

**விதூஷகன்**— *தங்களைப்போல இவளையும் காமநோய் பிடித்திருக்கலாம்.*

**அரசன்**— *என்னிடம் உனக்குள்ள நட்பு இவ்வாறு நினைக்கச் செய்கின்றது.*

**மாளவிகை**— *இது தான் அந்த அசோகமரம். அழகிய வளத்தை அபேக்ஷித்துப் பூக்களால் தன்னை அலங்கரித்துக் கொள்ளாமலிருக்கும் இவ்வசோகத்தின் நிலைமை, ஆசையும் கவலையும் நிறைந்த எனது நிலைமையை ஒத்திருக்கின்றது. நிழலும் குளிர்ச்சியும் பெற்று இதனடியிற் கிடக்கும் கற்பலகையில் அமர்ந்து எனது மனத்தை ஆற்றுகின்றேன்.*

---

இது தான்— "உத்கண்டிதாம் மாம்" என்பது மூலம். "எந்தப் பொருள் கிடைத்தால் எல்லாப் பொறிகளும் ஸுகத்தை அடையக் கூடுமென்று நினைக்கப்படுமோ, அந்தப் பொருளை அடைவதில் உறுதியாயுள்ள விருப்பம் உத்கண்டை எனப்படும்" என்று உத்கண்டையின் லக்ஷணம் கூறப்படுகின்றது. காமுற்ற பொருளை அடைய விருப்பமும், அதை அடையாமையாலுள்ள வருத்தமும், அதை அடைந்தால் ஸந்தோஷிக்கலாமென்ற எண்ணமும், அதை எப்படி அடைவதென்ற கவலையுமுள்ள இடத்தில் தான் இந்த உத்கண்டாபதத்தைப் பெரும்பான்மையாக உபயோகிப்பது வழக்கம்.

**விதூஷகன்—** மாளவிகை, தான் உத்கண்டிதை என்று சொன்னதைத் தாங்கள் செவியுற்றீர்களா ?

**அரசன்—** இதைக்கொண்டே உனது ஊஹம் தெளிவுள்ளது என நான் நினைக்கமுடியாது. ஏன் ?

குரவகப் பூம் பொடிகளைக் கொணர்ந்தும், ஒன்றோடொன்று பற்றிய தளிர்களைத் தனியாகப் பிரியும் வண்ணம் விரித்தும், அவற்றிலுள்ள நீர்த்துளிகளோடு கலந்தும் உலாவும் இந்த மலயமலைக் காற்று, காரணமின்றியே மனத்தில் ஓர் உத்கண்டையை உண்டாக்கக்கூடியது.

(மாளவிகை உட்காந்தாள்.)

**அரசன்—** நண்ப, இங்கு நாம் கொடிப் பரப்பில் மறைந்திருப்போமே.

**விதூஷகன்—** இராவதி, அடுத்து வருகின்றாற்போல எனக்குத் தோன்றுகிறது.

**அரசன்—** யானை, தாமரைப் பொய்கையைக் கண்டபின் முதலையைப் பற்றிக் கவலையுறாது.

(பார்த்துக்கொண்டேயிருக்கின்றான்.)

---

இராவதி— "இராவதிம் விய தூரே ஸமத்தேமி" என்பது மூலம். "விய" என்ற பிராகிருதம் ஒரு சொல்லாயிருந்தால் "இவ( =போல)" என்பது அதற்கு ஸம்ஸ்கிருத பதமாகும். "வி" என்பதைத் தனிப் பதமாகக்கொண்டால், அதற்கு ஸம்ஸ்கிருத பதம் "அபி" என்பதாகும். எனவே, "இராவதீமிவ தூரே ஸமர்த்தயே" என்றும், இராவதீமபி அதூரே ஸமர்த்தயே" என்றும் இருவிதத்தில் ஸம்ஸ்கிருத வாக்கியம் ஏற்படக் கூடும். முதல் வாக்கியத்திற்கு "அதோ சிறிது தூரத்தில் இராவதி வருகின்றாற் போலத் தோன்றுகின்றது" என்பது பொருள். "முன் சொல்லியிருக்கிறபடி இராவதி வரவேண்டிய ஸமயமும் நெருங்கிவருகிறது" என்பது இரண்டாம் வாக்கியத்தின்கருத்து. முதல் வாக்கியத்தில் "தூரே" என்பது இடத்தைக் குறிப்பதாகவும், இரண்டாம் வாக்கியத்தில் "அதூரே" என்பது காலத்தைக் குறிப்பதாகவும் கொள்ளல் வேண்டும். முதல் வாக்கியத்தை அங்கீகரித்து "இது அரசனைப் பயமுறுத்தக் கருதி விதூஷகன் இவ்வாறு பரிஹாஸமாகப் பேசுகின்றான்" என்று சிலர் கருத்துக் கூறுகின்றனர்.

மாளவிகை—மனமே, பற்றுக் கொம்பொன்றுமின்றி, வீணை எண்ணம் எண்ணுதே. ஒழித்துவிடு. என்னை ஏன் வருத்துகின்றுய்?.

(விதூஷகன் அரசனைப் பார்க்கின்றன்.)

அரசன்— (மனத்துள்) மனத்திற்கினிய மாளவிகே, அன்பின் அவலப் போக்கைப் பார்——

நீ உனது கவலையின் காரணத்தை வாய்விட்டுச் சொல்லவில்லை. உள்ளதை உள்ளபடியே காட்டுமென்ற நியதி ஊஹத்திலில்லாமையால் அதன் மூலம் ஒன்றையும் நிச்சயித்தறிய முடியாது. இவ்வாறிருப்பினும், ஏ வாழை போன்ற தொடையுடையவளே, நீ புலம்புவனவெல்லாம் என்னைக் குறித்தே என்று எனக்குத் தோன்றுகின்றன.

விதூஷகன்— இப்பொழுது தங்களுக்கு ஐயமறத் தெரியப் போகின்றது. தங்களது காமத்தூதுமொழியை என் வாயிலாகக் கேட்டறிந்த வகுளாவலிகை, ஏகாந்தமான இந்த இடத்திற்கு இதோ வருகின்றுள்.

அரசன்—நமது வேண்டுகோள், அவளது நினைவில் நிற்குமா?

விதூஷகன்— இவ்வேசி மகள், கௌரவம் பொருந்திய தங்களுடைய தூதினை இப்பொழுது மறப்பதா?. நானுமல்லவா அதனை இப்பொழுதும் மறவாமலிருக்கின்றேன்.

(காலுக்குரிய அலங்காரங்களைக் கையிலெடுத்துக்கொண்டு, பிரவேசித்து)

வகுளாவலிகை— தோழி, ஸௌக்கியம் தானே?.

---

மனத்திற்கு—"ப்ரியே பச்ய வாமதாம் ஸ்நேஹஸ்ய" என்பதுமூலம். வாமம் என்றுல், விபரீதமாயிருக்கின்றது என்பதுபொருள். இங்கு விபரீதத் தன்மையாவது, இல்லாத விஷயத்தையும் இருப்பதாகத் தோற்றுவித்தலேயாம்.

நீ உனது—"ஸ்நிக்தம் வீக்ஷிதம்...காமீ ஸ்வதாம் பச்யதி" என்ற சாகுந்தளச் செய்யுள் இங்கு நினைக்கற்பாலது.

இப்பொழுது—"அர்ப்பிதமதன ஸந்தேசா" என்பது மூலம். ஸந்தேசமென்பது தூதுமொழியாம்.

**மாளவிகை**— ஓ ஹோ, வகுளாவலிகையா ? உன் வரவு நல் வரவாகுக. உட்காருக.

**வகுள்ாவலிகை**— (உட்கார்ந்து) ஸகி, உனது தகைமையை உற்று நோக்கியே, தேவியார் உன்னை இந்தக் காரியம் செய்யும்படி ஆஜ்ஞாபித்திருக்கின்றார். ஆகையால் ஒரு காலை நீட்டு. அதற்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசிச் சிலம்பு பூட்டுகின்றேன்.

**மாளவிகை**— (மனத்துள்) மனமே, இந்தப் பாக்கியம் கிடைத்துவிட்டதென்று நினைத்து நீ மகிழவேண்டாம். இதிலிருந்து என்னை எவ்வாறு விடுவித்துக்கொள்வேன். அல்லது, இதுவே எனக்குப் பிணக்கோலமாக முடியட்டுமே.

**வகுளாவலிகை**— என்ன சிந்திக்கின்றாய் ?. இந்த ஸுவர்ண அசோகமரம் சீக்கிரம் பூக்கவேண்டுமென்பதில் தேவியார் பெரிதும் கவலைப்படுகின்றார்.

**அரசன்**— இம் முயற்சி முழுவதும் அசோக மரத்திற்கு வளம் கொடுப்பதற்காகவா ?.

---

ஸகீ— வகுளாவலிகை ஆரம்பிக்கும்போதே "உன் தகைமை அறிந்து தேவியார் இவ்வாறு ஆஜ்ஞாபித்திருக்கின்றார்" எனச் சொல்லி, மாளவிகையைக் கொண்டாடி வசப்படுத்த முயல்கின்றாள். வகுளாவலிகையின் ஸாமர்த்தியத்தை இது முதலாகப் பார்த்துவருக.

பிணக்கோலம்— "ம்ருத்யுமண்டனம் பவிஷ்யதி" என்பது மூலம். பிணத்திற்கு அலங்காரம் செய்வது இப்போது கூடச் சில ஜாதியாரில் காணப்படுகிறது.

என்ன— தேவியாருக்கு இவ்வசோகம் பூக்கவேண்டு மென்று பேரவா இருக்கின்றது என்று பேசி, "இப்பொழுது தேவியாருடைய மனப்பான்மை என்னிடம் ஸுமுகமாகவே இருக்கின்றது. இது பூத்தால் என் மனோரதம் நிச்சயமாய் நிறைவேறும். நான் அரசரிடம் எனது காதலைக் காட்டினாலும் தேவியார் முன்போலப் பொறாமைப் பட்டுக் கோபித்துக் கொள்ளமாட்டார்.". என்று மாளவிகையது மனத்தில் ஓரெண்ணத்தை முளைக்கச் செய்கின்றாள் வகுளாவலிகை.

**விதூஷகன்**— தேவியார், காரணமின்றி அந்தப்புரத்தினர்க்குரிய கோலத்தை மாளவிகைக்குச் செய்விக்கமாட்டார் என்பதைத் தாங்கள் இதுவரை தெரிந்துகொள்ளவில்லையா?

**மாளவிகை**— (காலைக் காட்டிக்கொண்டு) தோழி, இப்பொழுது பொறுத்துக்கொள்.

**வகுளாவலிகை**— அடி, நீ எனது தேஹம்.

**அரசன்**— நண்ப, என் அன்பார்ந்த மாளவிகையின் கால் நுனியில் செம்பஞ்சுக் குழம்பினால் வரைந்திருக்கும் வரையைப் பார். இது, சிவனார் சுட்டெரித்த மன்மதனாகும் மரத்திலிருந்து முதன்முதலாக முளைத்த தளிர்போலிருக்கின்றது.

**விதூஷகன்**— தேவியார், இந்தக் காலுக்குத் தக்கவாறே வேலையிட்டிருக்கின்றார்.

**அரசன்**— உள்ளபடி சொன்னாய்.

இந்த மடந்தை, புதிய தளிர்போலச் செவ்வியதும் நகவொளி வீசுவதுமான தனது நுனிக் காலால் உதைக்கும் பாக்கியத்தைப் பெறும் தகுதி, வளம் கொடுப்பதை விரும்பிப் பூக்காதிருக்கும் அசோக மரத்திற்கும், ஊடலேற்கும்படி தவறிழைத்துத் தலை வணங்கி அடிபணியும் அன்பனுக்கும் மாத்திரமே உளது.

---

தேவியார்— இங்குக் காணும் வேறு பாடப்படி, "எனக்காக இவ்வாறு மாளவிகையைத் தேவியார் அலங்கரித்திருக்கின்றார்" என்று நினைக்கின்றீர்களா?" என்று மொழிபெயர்க்கவேண்டும்.

நண்ப— மரம் தளிர்க்கத் தொடங்கும்பொழுது முதன்முதலாக வெளிவரும் தளிர் நன்கு சிவந்தும் அழகாயுமிருப்பதை நாம் காண்கின்றோம். மல்லிகை முதலிய செடிகளை வளப்படுத்த, எரிப்பது வழக்கம். பூமியைப் பண்படுத்தவும் இவ்வாறு செய்வதுண்டு. இங்கு ரகுவம்சம் ஒன்பதாம் ஸர்க்கம் எண்பதாம் செய்யுளையும் காண்க.

இந்த— "அகுஸுமிதமசோகம் தோஹதாபேக்ஷயா வா ப்ரணிஹிதசிரஸம் வா காந்தமார்த்ராபராதம்." என்பது மூலம். "தோஹதத்திற்காக அசோகம் உதைபடத் தக்கது" என்பது கருத்து. "தோஹதாபேக்ஷயா அகுஸுமிதம்— தோஹதத்தை விரும்பி முன்பு பூக்காதிருக்

**விதூஷகன்**— இந்த நங்கையிடம் தாங்களும் தவறிழைக்கக் கூடும்.

**அரசன்**— காரியஸித்தியைக் கண்டு பேசும் பிராமணரது வார்த்தையை ஏற்றுக் கொண்டேன்.

(பிறகு மதம் பூண்ட இராவதியும், அவளுடைய வேலைக்காரியும் பிரவேசிக்கின்றனர். )

**இராவதி**— அடி, மதம் என்பது மாதர்க்குச் சிறந்த அணிகலன் என்று பலரும் சொல்லக் கேட்டிருக்கின்றேன். இந்த உலகப் பேச்சு உண்மைதானோ ?.

**நிபுணிகை**— முன்பு இஃது ஓர் உலகப் பேச்சே. ஆனால் இப்பொழுது இது மெய்யே.

**இராவதி**— என்னிடம் நேசம் காட்டிப் பேசுவது போதுமடி. அரசர் ஊசலாடுமிடத்திற்கு முன்னரே சென்றிருக்கிறார் என்பதை நீ எங்கிருந்து தெரிந்துகொண்டாய் ?.

**நிபுணிகை**— தங்கள்மீது அரசர் வைத்திருக்கும் குறைவற்ற அன்பிலிருந்து.

**இராவதி**— அடி, இச்சகம் வேண்டாம். நடுநிலைமையிலிருந்து பேசு.

---

கின்ற அசோகமரம்" என்றும் பொருள் கூறலாம். "தோஹதாபேக்ஷயா" என்பதை அன்பனிலும் சேர்த்து "ஒரு விளையாட்டிற்காகத் தவறிழைத்து உதைபடும் அன்பன்" எனச்சிலர் உரை எழுதுகின்றனர். இவர்கள் "தோஹதாபேக்ஷயா வா ப்ரணமிதசிரஸம் வா" என்ற வா பதங்களை உய்த்துப்பார்க்கவில்லை.

அடி மதம்— "மத்தியம் முதலியவற்றால் உண்டாகும் களிப்புகலந்த மயக்கம், மதமெனப்படும்." என்று ரஸநூல் கூறும். இம் மதம் தருணம் மத்தியமம் அதமம் எனக் கூறுபாடுள்ளது. நடையில் கால் தளர்ச்சி, நடக்கமுடியாமை நினைவுக் குறைவு முதலியன, அதம மதத்தின் குறிகளாம். காளிதாஸர் இங்கு இராவதியின் ஸ்வபாவத்தை அவள் பேசும் முதல் வாக்கியத்திலேயே வெளிப்படுத்திவிட்டார்.

தங்கள்மீது— அரசர் தங்களிடம் விசேஷமான அன்பு வைத்திருப்பதால், தங்களுடைய வேண்டுகோளைத் தட்டாமல் அங்கு வந்திருப்பாரென்று நான் ஸஹிக்கிறேனென்கிறாள் நிபுணிகை. இந்த வேலைக்காரி

நிபுணிகை— வஸந்தகாலத்தில் கொடுக்கும் பரிசில் ஆசை கொண்ட ஆரிய கௌதமர் சொன்னார். ஆதலின், தாங்கள் காலம் தாழ்த்தாது விரைந்து செல்லுக.

இராவதி— (நிலைமைக்குத் தக்கபடி நடந்து) அடி, என்னை மதம் வாட்டுகின்றது. மனம் ஐயரைக்காண விரைந்து செல்லத் தூண்டுகின்றது. கால்களோ, வழியில் அடி எடுத்து வைக்கத் தயங்குகின்றன.

நிபுணிகை— ஊசலாடும் இடத்திற்கு வந்துவிட்டோமே.

இராவதி— அடி, இங்கு ஐயரைக் காணேமே ?

நிபுணிகை— தேடிப் பாருங்கள். ஒரு கால் பரிஹஸிக்கக் கருதி பிரபு, எங்காவது ஒளிந்திருக்கக் கூடும். நாமும் ஞாழற்கொடி சூழ்ந்து அதோ நிற்கும் அசோகமரத்தடியிலுள்ள கற்பாறையை நோக்கிச் செல்வோம்.

இராவதி— அப்படியே.

நிபுணிகை— (பார்த்து) தாங்கள் பாருங்கள். மாமொட்டைத் தேடுகையில் நம்மை எறும்புகள் கடித்துவிட்டன.

---

மிகவும் ஸாமர்த்தியமுள்ளவளாகையால் இவளுக்கு "நிபுணிகை" என்று பேர் கொடுக்கப் பட்டிருக்கிறது.

வஸந்தகாலத்தில்— "வஸந்தோபாயன லோலுபேன" என்பது மூலம். உபாயனமாவது— பரிசு, கையுறை, பச்சை என்று சொல்லப்படும் பொருளாம். "கொழுக்கட்டை முதலியன உபாயனம்" என்று சிலரும், "மாம்பழம் முதலியன உபாயநம்" என்று வேறு சிலரும் கருதுகின்றார்கள். வஸந்தகாலத்தில் சில விருதங்கள் உள்ளன. விருதங்களின் முடிவில் கொடுக்கும் பொருள், வாயனமென்று வடமொழியில் கூறப்படும். விருதமுடிவில் கொடுக்கும் கொழுக்கட்டை முதலியவற்றை "வாயனே" என்று வழங்குவதுண்டு. "காலம் தாழ்த்தாது விரைந்து செல்லுக" என்பதை விதூஷகனுடைய வாக்கியமாகச் சிலர் கொள்கின்றனர்.

மாமொட்டை.—மாமொட்டைத் தேடுகையில் அது கிடைக்காததும் தவிர எறும்புகளும் கடித்துவிட்டாற்போல, அரசரைத் தேடுகையில் அவர் காணப்படாததும் தவிர இங்கு வகுளாவலிகையுடன் மாளவி

இராவதி— இஃது என்னை ?

நிபுணிகை— அதோ அசோக மரநிழலில் வகுளாவலிகை, மாளவிகையின் கால்நிற கோலம் செய்துகொண்டிருக்கின்றாள்.

இராவதி— (திடுக்கிட்டு) இஃது இவளுக்குத் தகாததன்றோ? என்ன நினைக்கின்றாய் ?

நிபுணிகை— தேவியார் ஊசலினின்று நழுவி விழுந்ததில் கால்கள் நோவுற்றிருப்பதால், இந்த அசோகத்திற்குத் தோஹதம் கொடுக்கும்படி மாளவிகையை அனுப்பியிருப்பார் என்று எண்ணுகின்றேன். அற்றேல், தேவியார், தாம் அணியும் சிலம்புகளை வேலைக்காரி அணிய அனுமதி கொடுப்பாரா ?

இராவதி— இஃது இவளுக்குப் பெரிய வெகுமதியல்லவா ?

நிபுணிகை— அரசரைத் தேடிப்பிடிக்கவேண்டாமா?

இராவதி— அடி, என்னுடைய கால்கள் இவ்விடம் நகருகின்றில. மதமும் என் மனத்தை என்னமோ தடுமாறச் செய்கின்றது. ஐயப்பட்ட விஷயத்தின் முடிவைப் பார்க்கவே

---

கையைக் காணவும் நேரிட்டது என்று நிபுணிகை பேசுகின்றாள். இங்கு விஷமாலங்காரத்தையும் லலிதாலங்காரத்தையும் காண்க.

திடுக்கிட்டு.—"சங்காம் ரூபயித்வா" என்பது மூலம். மாளவிகை வேலைக்காரி யல்லவா? இவளுக்கு என்ன கோலம்? என்கிறாள் இராவதி. ஆட்டத்தில் தான் தோற்றுப்போனதும் இராவதியின் நினைவுக்கு இப்போது வருமன்றோ.

இஃது.—தன்னைப் பற்றிப் பெரிதும் மதித்திருந்த இராவதிக்கு இப்பொழுது பொறாமையும் துக்கமும் உண்டாகத் தொடங்கிவிட்டன. தேவியார், தன்னைப் புறக்கணித்து, வேலைக்காரியாகிய மாளவிகையைத் தோஹதத்திற்கு ஏவியதைச் செருக்குள்ள இராவதி எவ்வாறு பொறுப்பாள் ?

என்னுடைய.—இங்கு அதம மதமாகையால் "கால்கள் நகருகின்றில" எனப் பேசப்பட்டது. மாளவிகையைப் பார்த்ததும், இவளுக்குத் தன்னைத்தான் அறியாமல் ஓர் ஏக்கம் பிறந்துவிட்டதென்பதையும்

ண்டும். (மாளவிகையை நன்றாகப் பார்த்து, மனத்துள்) எனது உள்ளம் நடுங்குவது உரியதே.

**வகுளாவலிகை**— (காலைக் காண்பித்து) தோழி மாளவிகையே, உனது காலில் நான் செம்பஞ்சுக் குழம்பால் வரிகள் வரைந்திருப்பது உனக்குப் பிடிக்கின்றதா?

**மாளவிகை**— எனது காலாகையால் புகழ வெட்கமாயிருக்கின்றது. இவ்வாறு கோலஞ்செய்யும் கலையை நீ யாரிடமிருந்து கற்றுக்கொண்டாய்? சொல்லுக.

**வகுளாவலிகை**— நான் இவ்விஷயத்தில் அரசருடைய மாணாக்கி.

---

இங்குக் கவி ஸூசிப்பிக்கின்றார். இராவதி, மாளவிகையை உற்றுப் பார்த்தவுடன் அவள் அழகை எண்ணியும், அரசருடைய மனநிலைமையை நினைத்தும், நாட்டியம் செய்ததைக் கருதியும் திடுக்கிட்டு இனி அரசர் இவளிடமே காதல்—விசேஷமான காதல் கொள்வாரெனச் சிந்தித்து வருந்துகின்றாள்.

யாரிடமிருந்து.—கோலம் செய்த வகுளாவலிகை "கோலம் நன்றாயிருக்கிறதா?" என்று வினவியதும், மாளவிகை தக்கபடி மறுமொழி கூறியதும் மிகவும் இயற்கையானவையே. மாளவிகைக்குக் கலைகளைப் பயில்வதில் பெரிதும் அவா இருப்பதால், இவ்வாறு கோலஞ்செய்யும் கலையைத் தானும் கற்கவேண்டுமென்று எண்ணி "இவ்விஷயத்தில் உனக்கு ஆசிரியர் யார்" என்று வகுளாவலிகையைக் கேட்டதும் ஸ்வாபாவிகமானதே. புத்திசாலினியான வகுளாவலிகையோ, தனது தூதத் தொழில் நிறைவேறும் வழியில் இறங்கி மறுமொழி கூறுகின்றாள்.

நான்.—"நான் அரசரது மாணாக்கி. இந்தக் கலையைப் பயில உனக்கும் ஆசையிருந்தால் நீயும் அரசரிடம் மாணவியாகி இதனைக் கற்றுக் கொள்ளலாம்" என்ற கருத்துடன் வகுளாவலிகை பேசுகின்றாள். "குரு செய்யவேண்டிய சில காரியங்களைச் சிஷ்யன் செய்கின்றாற் போல, அரசர் செய்யவேண்டிய இக்காரியத்தை அவரது மாணாக்கியான யான் செய்கிறேன்" என்பது இங்குத் தொனிக்கருத்தாம். மாணாக்கன் குருவின் கட்டளையை நிறைவேற்றப் பாடுபடுவதையொப்ப, அரசனின் ஆணையை நிறைவேற்றப் பாடுபடும் வகுளாவலிகை உண்மையில் அரசனது மாணாக்கியேயன்றோ.

**விதூஷகன்**—தோழ,குருதக்ஷிணை வாங்க விரைந்துசெல்லுக.

**மாளவிகை**— தோழி, நீ செருக்கடையாதிருப்பதை மிகவும் பாராட்டுகின்றேன்.

**வகுளாவலிகை**— என் பயிற்சியைக் காட்டத் தகுந்த காலங்கள் கிடைத்தமையால் இப்பொழுது நான் கர்வப்படுவேன். (மனத்துள்) ஆ ஆ. எனது தூது பயன்பெற்றது. (செம்பஞ்சு தீட்டியதைப் பார்த்துக்கொண்டே வெளிப்படையாக) தோழி, ஒரு காலில் செம்பஞ்சு எழுதி முடிந்துவிட்டது. இஃது உலர வாயால் ஊதுவதொன்று மட்டுமே, இனிச் செய்யவேண்டிய காரியம். அல்லது, இது வேண்டாம். இந்த இடமே நல்ல காற்றுடையதன்றோ.

**அரசன்**— நண்ப, பார் பார்—

இந்த மாளவிகையின் காலில் ஊட்டப்பட்டு உலராதிருக்கும் செம்பஞ்சுக் குழம்பு உலருமாறு வாயால் ஊதித் தொண்டு புரியத் தக்கதோரு ஸமயம். இதோ எனக்கு முதன் முதலாக வாய்த்திருக்கின்றது.

**விதூஷகன்**— என் தங்களுக்கு இத்துணை மனத்துடிப்பு? காலக் கிரமத்தில் தாங்கள் வெகுகாலம் நடத்தவேண்டிய காரியமன்றோ இது ?.

---

தோழ.—"குருதக்ஷிணையாக மாளவிகையைப் பெறலாம்" என்று பரிஹாஸ வார்த்தையைப் போலப் பேசி, சேரப்போகும் காரியத்தைக் குறிப்பாலுணர்த்துகின்றான் விதூஷகன்.

தோழி.—"நல்லாசிரியரிடமிருந்து நற்கலையைப் பயன்படப் பயின்றும் நீ கர்வம் கொள்ளாதிருப்பதைப் பாராட்டுகின்றேன்" என்கிறாள் மாளவிகை. மாளவிகைக்கு அரசர்மீதுள்ள காதல் இதுமுதலே எழத் தொடங்குகின்றது.

என்.—என்னே வகுளாவலிகையின் மிடுக்கு! மாளவிகையின் அப்போதைய நிலைமையை உற்றுப் பார்த்துணர்ந்த வகுளாவலிகை "என் தூது பலித்தது" என்று உறுதிகொண்டு மகிழ்கின்றாள்.

என்.— ஒரு ஸமயம் காமமேலீட்டால் அரசன் மாளவிகையின் காலை ஊதக்கூடும். இஃது அரசனது நிலைமைக்குத் தகாதது என்று நினைத்து, விதூஷகன் அரசனைத் தடுக்கின்றான். எனவே, முன்பு குரு

வருளாவலிகை— தோழி, உனது கால் செந்தாமரை போலச் செவ்வியதாயிருக்கின்றது. பல்லாற்ருனும் நீ பர்த்தாவின் மடிமீது புரளுவாயாக.

(இராவதி நிபுணிகையின் முகத்தைப் பார்க்கின்றள்.)

அரசன்— இஃது எனக்கு ஆசிமொழியாம்.

---

தக்ஷிணைக்காக விரைந்து செல்லும்படி சொன்ன விதூஷகனது வாக்கியத்தோடு இவ்வாக்கியத்திற்கு முரண்பாடில்லை.

உனது கால்.—பொய்யல்லாததையே சொல்லிப் புகழ்ந்து மாளவிகையைத் தன் வசப்படுத்துகின்ருள் வருளாவலிகை. தேவர்களும் ஸ்துதியில் மயங்கிவிடுகிருர்களன்ரே. "ஸர்வதா பர்த்து: அங்கபரிவர்த்தினீ பவ" என்பது மூலம். அங்கபதத்திற்கு ஸமீபமென்ற பொருளுமுண்டு. இங்கு வருளாவலிகையின் புத்தி கூர்மையை உய்த்துணர்க. கன்னிகைக்கு ஆசி கூறும்பொழுது "நல்ல அகமுடையான் கிடைப்பாளுக" என்று மொழிவது, எற்றதும் வழக்கத்திலுள்ளதுமான ஒரு விஷயம். அவ்வழக்கினை அனுஸரித்துப் பொதுவாகப் பேசுபவள் போல நடித்து "பர்த்து: அங்க பரிவர்த்தினீ பவ" என்ருள். பர்த்தா என்ருல் கணவன் என்ற பொருள் வெளிப்படையாம். வேலைக்காரி முதலியோர் அரசனைக் குறித்து "பர்த்தா" (தலைவன்) என்று கூறுவது வழக்கு. "நான் வேறு பதங்களை உபயோகிக்காமல், "பர்த்தா" என்ற பதத்தையே உபயோகிக்கின்றேன். பர்த்ருபதமோ, அரசரைக்குறித்தே நாங்கள் தினந்தோறும் வழங்கிவரும் பதம். இந்த வார்த்தையைக் கேட்டபின் மாளவிகையின் மறுமொழியும் முகவிகாஸாதிகளும் எவ்வாறு இருக்கின்றன என்பதை உய்த்துணர்வேன். பிறகு அந்த நிலைமைக்குத் தக்கபடி மறுமொழிகொடுத்து எனது காரியத்தை ஸாதிக்கத் தொடங்குவேன்" என்பது வருளாவலிகையின் உட்கருத்தாம். வருளாவலிகை எப்பொழுதும் அந்தப்பதத்தை உபயோகிக்கும் வழக்கத்தை அனுஸரித்தும் "கஞ்சி வாதப்பா" நியாயப்படியும், இந்தப் பர்த்ருபதம், அரசனுக்கு, வருளாவலிகையின் உட்கருத்துப்படியே பொருள் தந்தது.

இராவதி.—இராவதியையும் இந்தப் பர்த்ருபதம் கலக்கித் துன்புறுத்தாமல் விடுமோ? நிபுணிகையது முகத்தைப் பார்ப்பதைத் தவிர்த்து இப்பொழுது இராவதி என்னசெய்யக்கூடும்.

இஃது.—எல்லாச் சிறப்புக்களும் பொருந்திய மாளவிகைக்கு 'பர்த்து: அங்க பரிவர்த்தினீ பவ' என்பது ஆசியாகாதென்றும், இது தனக்குத்தான் ஆசியாம் என்றும் அரசன் நினைக்கின்ருன்.

**மாளவிகை—** என்னடி, பேசத் தகாததைப் பேசுகின்றாய்.

**வகுளாவலிகை—** பேசத் தக்கதைத்தான் பேசினேன்.

**மாளவிகை—** நான் உனக்குப் பிரியமானவளல்லவா ?

**வகுளாவலிகை—** எனக்குமட்டுமல்ல.

**மாளவிகை—** வேறு யாருக்கு ?

**வகுளாவலிகை—** குணங்களில் மிக்க பரிவு காட்டும் பர்த்தாவுக்கும்.

---

என்னடி.—மாளவிகையும், தனது சாதுரியத்தைப் பேச்சில் காட்டுகின்றாள். கன்னிப்பெண்ணை இவ்வாறு கூறினால், அவள் வெட்கி, மறுத்துக்கூறுவது ஸஹஜமன்றோ. "நான் ஒரு வேலைக்காரி. எனக்குக் கணவனா. என் பேசக்கூடாததைப் பேசுகின்றாய்" என்பது வெளிப்படையான கருத்து. "அடி உனது பர்த்ரு பதத்தின் உட்கருத்தை நான் அறிந்துகொண்டேன். எனக்கும் ஆவல்தான். ஆயினும் இந்தவிஷயம் பேசப்படக்கூடுமோ? நீயே ஆராய்ந்துபார்" என்பது உட்கருத்தாம்.

பேச.—வகுளாவலிகையும் தனது உட்கருத்தை ஐயமற்ற வார்த்தைகளால் வெளிப்படுத்துகிறாளில்லை. "நீ கன்னிப்பெண். உனக்கு எப்படியும் விவாஹ மேற்படாமலிருக்குமோ. நான் பேசினதில் தகாமை என்ன" என்ற கருத்துப்படப் பேசுகின்றாள். உட்கருத்தோ இங்கு ஸ்பஷ்டமானது.

நான்.—"என்னிடம் உனக்கு அன்பு இருப்பதால் இவ்வாறு ஆசி கூறுகிறாய்போலும்" எனத் தோன்றுமாறு மாளவிகையும் பேசுகின்றாள். "உனக்கு என்னிடம் அன்பு அதிகமாகையால் பேசவும் ஒண்ணாத காரியத்தையும் உன் கருத்துப்படி நிறைவேற்றிவைப்பாய் என்று நம்பியிருக்கின்றேன்" என்பது உட்கருத்தாம்.

எனக்குமட்டுமல்ல.—வகுளாவலிகையின் சாதுரியமே சாதுரியம். இந்தச் சாதுரியத்தைப் பிரியமுள்ள அரசனை யொப்பப் பொறுமை கொண்ட நிபுணிகையாலும் கொண்டாடாமலிருக்க முடியவில்லை.

வேறு.—வகுளாவலிகை, பெரும்பாலும் அரசனையே குறிப்பிடக் கூடுமென்பதை மாளவிகை ஊகித்தறிவாளாயினும்; வெளிப்படையாக வகுளாவலிகையின் வாயிலிருந்து கேட்கவே, இவ்வாறு அவள் வினவுகின்றாள்.

குணங்களில்.—வேலைக்காரியை பிரபு விரும்புவாரோ என்ற ஸந்தேகத்தைத் தீர்க்கவே, இந்த அடைமொழி பர்த்தாவுக்குக் கொடுக்கப்

**மாளவிகை**— வீண் பொய்பேசவேண்டாம். இஃது என்னிடம் இல்லவேயில்லை.

**வகுளாவலிகை**— உண்மை தான். உன்னிடத்தில் இல்லை. இளைத்தும் வெளுத்தும் அழகுற்ற பிரபுவின் அங்கங்களிலன்றோ இது காணப்படுகின்றது.

**நிபுணிகை**— பாழெண்ணங் கொண்ட இந்தப் பாவி வகுளாவலிகை, முன்னரே முடிவுசெய்திருப்பவள் போலவன்றோ உடனுக்குடன் தக்கவாறு மறுமொழி கூறுகின்றாள்.

---

பட்டிருக்கிறது. குணம் பிரதானமே யன்றி, ஜாதிமுதலியன முக்கியங்கள் அல்ல எனக் குறிப்பிடுகின்றாள். வகுளாவலிகை, இப்பொழுதே முன்பு தானுபயோகித்த பர்த்ருபதத்தின் உண்மைப்பொருளை வெளியிடத் தொடங்குகின்றாள். பர்த்ருபதம் வெறும் கணவனை மாத்திரம் குறிப்பிடுவதாயிருந்தால் "குணேஷு அபிநிவேசிநோ பர்த்து: அபி" என்று முன்பே பரிவு ஏற்பட்டிருப்பதாகக் கூறுவது பொருந்தாதன்றோ. இந்தப் பேச்சிலிருந்து முன்பு கூறிவந்த பர்த்ரு பதத்தின் உண்மைப்பொருளை மாளவிகை, அறிந்துகொள்ளட்டுமே என்பது வகுளா வலிகையின் கருத்தாம்.

**வீண்.**—"அலீகம் மந்த்ரயஸே. ந ததேவ மயி நாஸ்தி" என்பது மூலம். வகுளாவலிகை வாய்திறந்து சொன்னாலென்ன என்று கருதி, வெகு ஸாமர்த்தியமாக மாளவிகை மறுமொழி கூறுகின்றாள். "இஃது என்னிடம் இல்லவேயில்லை" என்றாள் மாளவிகை. இங்கு "இஃது" என்பது எது? "நான் கன்னிகையாதலால் எனக்குக் கணவர் உண்டோ? கணவரில்லாத நிலையில் பர்த்தாவின் பரிவு எனக்கு எப்படி நேரக் கூடும்" என்று கருத்துத் தோன்றும் விதம் மறுமொழி கூறினாள். "அடி, நீ நினைக்கிறபடி எனக்குக் குணங்கள் உண்டோ? அரசரது பரிவுதான் எனக்கு எவ்வாறு கிடைக்கும்" என்ற கருத்தைத் தொனிப்பிக்கின்றாள்.

**உண்மைதான்.**—இனி எவ்வளவு காலம் இவ்வாறு மறைத்துக் கூறுவது என்று எண்ணி வகுளாவலிகை நன்றாகத் தனது அபிப்பிராயத்தை வெளியிடுகின்றாள். "இளைத்தும் வெளுத்தும் அழகுற்ற" என்பதனால் இளைப்பு முதலியன காமதாபக்குறிகள் எனத் தெரிவிக்கின்றாள். வகுளாவலிகையின் இப்புத்திகூர்மையை, நிபுணிகையே அடுத்த வாக்கியத்தில் புகழ்வதால் நாம் புகழாது விடுவோம்.

**வகுளாவலிகை**— "அன்பினை அன்பினால் அளந்தறியவேண்டும்" என்ற ஆன்றோர் மொழியைச் சான்றாகக் கொள்க.

**மாளவிகை**— என்னடி, உன் மனம்போனவாறெல்லாம் பேசுகின்றாயே.

**வகுளாவலிகை**— அன்று, அன்று. அன்பு நிறைந்த இம் மெல்லிய மொழிகள் பிரபுவினிடமிருந்து என் மூலமாக வெளிப்படுகின்றன.

**மாளவிகை**— தோழி, தேவியாரை நினைக்குங்கால், என மனம் இவற்றை நம்பவில்லை.

**வகுளாவலிகை**— மடந்தாய், எவனாவது வண்டுகடிக்கு அஞ்சி, வஸந்தருதுவின் சிறந்த பொருளாகிய மாம்பூவினைப் பறித்துச் சிரமேற் சூடாமலிருப்பானா?

---

அன்பினை.—இந்த வாக்கியம், முன்பேச்சின் பிற்பகுதியாம். "உன் வார்த்தையிலிருந்து உனக்கு அரசரிடம் காதல் இருப்பதாகத் தெரிகிறது. இஃது உண்மைதானா? அவ்வாறாயின் அரசருக்கும் உன்மீது காதலிருப்பதாக நீ ஏன் நினைக்கக்கூடாது. மனஸுக்கு மனமே ஸாக்ஷி என்பது பழமொழியன்றோ" என்கிறாள் வகுளாவலிகை. "ஹ்ருதயம் த்வேவ ஜாநாதி ப்ரீதியோகம் பரஸ்பரம்" என்ற ராமாயணம் இங்கு நினைக்கற்பாலது.

உன்மனம்.—"வெறும் ஊஹம் வேண்டாம். என் வார்த்தையிலிருந்து அரசர்மீது எனக்குள்ள காதலை நீ அறிந்தாற்போல, அரசருக்கு என்மீது காதலிருப்பதை அவருடைய வாய்மொழிகொண்டே அறிந்தனையா? அல்லது உன் மனம்போனபடி பேசுகின்றாயா?" என்று மாளவிகை வினவுகின்றாள். இவ்வினா,நிச்சயமறிந்து மகிழ்வதற்காகவே.

அன்று அன்று.—"நீயாவது இன்னமும் ஸ்பஷ்டமாய்க் கூறவில்லை. அரசரோ வெளிப்படையாகவே என்னிடம் கூறியிருக்கின்றார். அவர் கூறியவற்றையே நான் உனக்குத் தெரிவித்தேன்" என்கிறாள் வகுளாவலிகை.

தேவியாரை.—"தேவியிடம் மிகவும் அன்பும் அச்சமும் கொண்டவராகையால், அரசர் தேவியின் வேலைக்காரியாகிய என்னைக் காதலிப்பாரென்பது என்னால் நம்பமுடியாததாயிருக்கிறது. ஆகையால் எனது இவ்வெண்ணம் எப்படி நிறைவேறுமோ?" என்று மனம் குழைந்து மொழிகின்றாள் மாளவிகை.

மடந்தாய்.—"என்னே உனது மடமை" என்கிறாள். "நீயும் தேவி

**மாளவிகை**— அடி, எனக்கு ஏதேனும் துன்பம் நேரிடுமாயின், அப்பொழுது நீ எனக்கு மிகவும் உதவி புரிவாயாக.

**வகுளாவலிகை**— வாடியபொழுதும் வாஸனைவிடாத வகுளாவலிகையல்லவா நான்?

**அரசன்**— நன்று. வகுளாவலிகையே, நன்று.

மாளவிகையின் மனமறிந்த பின்னர் பிரஸ்தாவிக்கத் தொடங்கினாய். அவள் மறுத்துக் கூறியபொழுது தக்கவாறு விடை அளித்தாய். இவ்வாறு செய்து, உன் வார்த்தைப்படி நடக்கும் வண்ணம் அவளை வயப்படுத்திக் கொண்டாய். ஆகவே "காமிகளின் ஆவி தூதிகளின் கையில்" என்பது எத்துணை ஏற்புடையது?

**இராவதி**— அடி, பார்த்தனையா பார்த்தனையா? வகுளாவலிகை, மாளவிகையை அரசர் விஷயத்தில் மெல்ல மெல்ல இறக்கிவிட்டாளே!.

**நிபுணிகை**— அம்மா, காமுறாதவரையும் காமுறச் செய்வதாகவன்றோ வகுளாவலிகையின் உபதேசமிருக்கின்றது.

**இராவதி**— என் மனம் நடுங்கியதில் பிழையொன்றுமில்லை. இருக்கட்டும். செய்திமுழுதும் தெரிந்துகொண்டு, பிறகு நடக்கவேண்டியதைப் பற்றி ஆலோசிக்கலாம்.

---

யை நினைத்து அஞ்சாதே" என்பதை உவமை மூலமாகக் குறிப்பிட்டு, மாளவிகையை வரும் காரியத்திற்குத் தைரியத்துடன் ஒருப்பட்டுநிற்கத் தூண்டுகின்றாள்.

ஏதேனும்.—பூர்ண ஸம்மதியுடன் உதவியை நாடுகின்றாள் மாளவிகை. மேலே இருவருமாகவே சிறையிலடைக்கப்படுவதால், இவ்வார்த்தை உண்மையாகவே பலித்துவிடுகிறது.

வாடியபொழுதும்.— வகுளாவலிகை—மகிழம்பூ மாலை. மகிழம்பூ வாடினாலும், அதன் வாஸனை நீங்காது. என்ன அழகான பேச்சு இது. "என்ன கஷ்டம் வந்தாலும் உனக்கு உதவிசெய்யாமலிருக்கமாட்டேன். இது திண்ணம். மாறாக நடந்தால் என்பேரையே மாற்றி மறுபேரிட்டு என்னை நீ அழைக்கலாம்" என்று வகுளாவலிகை சபதம் செய்கின்றாள் போலும்.

மாளவிகையின்.–வகுளாவலிகை, "அரசருடைய மாணாக்கி" என்று

**வகுளாவலிகை—** தோழி, உனது மற்றைக் காலிலும் கோலம் செய்துவிட்டேன். இரண்டிலும் சிலம்புகளைப் பூட்டுகின்றேன்.

(சிலம்புகளைப் பூட்டியதாக அபினயித்து)

தோழி, எழுந்திரு. இந்த அசோகமரம் பூக்கும்வண்ணம் தேவியாரது கட்டளையை நிறைவேற்று.

(இருவரும் எழுந்திருக்கின்றனர்.)

**நிபுணிகை—** தேவியாரது கட்டளை என்பதை இப்பொழுது கேட்டீர்களா ?

**வகுளாவலிகை—** ராகமேற்று அனுபவிக்கத் தக்க வண்ணம் இதோ முன்பில் நிற்பதைப் பார்.

**மாளவிகை—** (ஸந்தோஷத்துடன்) யார்? அரசரா ?

**வகுளாவலிகை—** (புன்னகையுடன்) அரசர் அன்று. அசோக

---

தான் சொன்னதற்கு மாளவிகை கூறிய மறுமொழியிலிருந்து அவளுடைய அபிப்பிராயத்தை அறிந்து சிறுகச் சிறுகத் தன் எண்ணத்தை வெளியிடத் தொடங்கினள். "பேசத்தகாததைப் பேசுகின்றாயே" என்றும் "இஃது என்னிடம் இல்லவேயில்லை" என்றும் மாளவிகை மறுத்துக் கூறியபொழுது, தன் எண்ணத்தை நிலைநிறுத்தத் தக்கபடி மறுமொழி கூறினள். இப்படிச் செய்து 'உதவி புரிவாயாக' என்று மாளவிகை தன்னையே வேண்டிக்கொள்ளுமாறு அவளைத் தன் வசப்படுத்திவிட்டாள் வகுளாவலிகை.

ராகமேற்று— "ஏஷ உபாரூடராக உபபோகக்ஷம: புரதஸ்தே த்ருச்யதே" என்பது மூலம். "ஏஷ:" என்பது ஆண்பால். அரசனையும், பல்லவகுச்சத்தையும் குறிப்பிடுவதற்காகவே இவ்வாறு பிரயோகிக்கப்பட்டது. இந்த வாக்கியம் ரஸம் நிரம்பியுள்ளது. "ஏஷ:" என்பது பொதுச் சொல். ராகம்—சிவப்பு, காதல். உபபோகம்—அனுபவம். மாளவிகையின் அப்போதைய நிலைமையை நன்கறிந்த வகுளாவலிகை, மாளவிகையின் பாவனுவிசேஷத்தால் அவள் முன்பு அரசன் தோற்றக் கூடுமென்று எண்ணியும் பரிஹஸிக்கக் கருதியும் இவ்வாறு சிலேடையில் பேசினள். அரசனுடைய பிரவேசமும் இங்கு ஸூசிப்பிக்கப்பட்டது.

அரசரா ?— இது மாளவிகையின் மனப்போக்கை உணர்த்துகிறது.

மாத்தின் கிளையில் தொங்கும் தளிர்க் கொத்து. இதனைப் பறித்துக் காதில் அணிந்துகொள்,

விதூஷகன்— கேட்டீர்களா ?

அரசன்— தோழ, காதலுடையார்க்கு இவ்வளவு மட்டுமே போதும்.

தலைவனும் தலைவியும் தம்முள் காதல் ஒத்திருந்தும், கூடிக்குலாவ வழியில்லாமல் ஏங்கி மனமுடைந்து உடலழிந்து உயிர் நீக்குவதாயின், இதனைச் சிறிதளவு சிறந்ததெனக் கொள்வேனேயன்றி, இருவருள் ஒருவர் காமுற்றும், மற்றவர் காமுறுமலுமிருக்கும் நிலைமையில் இவர்க்கு ஏற்படும் கலவியைப் பெரிதென நான் கொண்டாடமாட்டேன்,

(மாளவிகை தளிர்க்கொத்தைப் பறித்துக் காதில் அணிந்துகொண்டு அசோகமரத்தின்மீது லீலையாகக் காலை உபயோகிக்கின்றாள்)

அரசன்— தோழ,

மாளவிகை, இந்த அசோகமரத்திலிருந்து காதில் அணிதற்குரிய தளிரைப் பறித்துக்கொண்டு, தனது செவ்விய பாதத்தை இதற்கு உதவுகின்றாள். இவ்வாறு இருவரும் தக்கபடி கைம்மாறு வழங்கியதைக் காணும்பொழுது, "இந் நலனிழந்தவன் நானே" என்று எண்ணுகின்றேன்.

வகுளாவலிகை— தோழி, நீ காலால் கொடுத்த இந்தச் சிறந்த வெகுமதியைப் பெற்றும், இவ் வசோகம், பூக்கக்

---

அரசர் அன்று— "பல்லவகுச்ச:" என்பது மூலம். ஆண்பாலான "வஷ:" என்ற பதம் அடைமொழியாகக் கூடிய விசேஷ்யம் இங்குப் பேசப்பட்டது.

தலைவனும்— "ரதிம் உபயப்ரார்த்தனு குருதே" என்ற சாகுந்தளச் செய்யுளும் இதே கருத்தைக் கொண்டது.

மாளவிகை— மாளவிகையின் கால் அசோகபல்லவத்தை யொப்பச் செவ்வியதாயிருக்கின்றது என்பது கருத்து. இங்கு அணி பரிவ்ருத்தியாம். "ஆத்மானமவஞ்சிதம் மன்யே" என்றும் பாடமுண்டு. அப்பொழுது "இருவரும்......காணும்பொழுது, இவ்விருவரும் ஏமாற்றமடையவில்லை என்று எண்ணுகின்றேன்" என்பது பொருள்.

காலம் தாழ்க்குமேயானல், அந்தக் குற்றம் உன்னைச் சாராது. இம் மரம் குணமில்லாதது என்றே ஏற்படும்.

**அரசன்—**

ஏ அசோகமரமே, துடியிடையாளாகிய மாளவிகை, புதிய தாமரை மலரைப் போல மெல்லிய தனது காலால் சிலம் பொலிக்க உன்னை உதைத்தது, உனக்குப் பெரிய வெகுமதியன்றோ. இதனைப் பெற்றும் நீ உடனே அரும்பு விடத் தொடங்காவிடின், ரஸிகனை காதலனுக்கும் உரியதான இந்தத் தோஹதத்தை நீ பாழ்படுத்தினய் என்றே நான் எண்ணுவேன்.

தோழ, ஏதாவதொரு வார்த்தையை (காரணத்தை) முன்னிட்டுக் கொண்டு, உட்செல்ல விரும்புகின்றேன்.

**விதூஷகன்—** போவோம் வருக. இவளைப் பரிஹஸிக்கப் போகிறேன்.

(இருவரும் உட்செல்கின்றனர்)

**நிபுணிகை—** அம்மா, பிரபு இங்குத் தான் வருகின்றார்.

**இராவதி—** இதனை என் மனம் முன்னமேயே ஊஹித்து விட்டது.

**விதூஷகன்—** (அருகு சென்று) அம்மா, மேன்மை பொருந்திய அரசருடன் தோழமை கொண்ட இவ் வசோகத்தை இவ்வாறு இடக்காலால் உதைக்கலாமா?.

**இருவரும்—** ஆ! ஆ!!" அரசர்.

---

அசோகமரமே.—அரசன் தனது மனோரதத்தை இதன் வழியாக வெளியிடுகின்றான். இந்த வெகுமதி தனக்குக் கிடைக்கலாகாதா என்று விரும்புகின்றான். பூக்காதிருக்கும் அசோக மரத்தை மாளவிகை, அந் நிலைமையில் தன்னோடு ஒப்பிட்டுக்கூறினள்; அரசனோ, உதைக்கப்படும் நிலைமையில் அதனைத் தன்னோடு ஒப்பிட விரும்புகின்றான்.

மேன்மை—"உதைபடும் இம்மரம், அரசரது விருப்பப்படி அவருடன் தோழமைகொண்டதன்றோ. அரசரையே நேராக உதைக்கவேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல், அவருடைய தோழமை ஏற்ற அசோகத்தை உதைத்தது தகுமா" என்பது பரிஹாஸசீலனான விதூஷகனின் உட்கருத்தாம்.

**விதூஷகன்**— வகுளாவலிகே, நீ விஷயம் தெரிந்தவளல்லவா?. மாளவிகை, இவ்வாறு தகாத காரியம் செய்யும்பொழுது நீ அவளை என் தடுக்கவில்லை?.

(மாளவிகை அச்சத்தைக் காட்டுகின்றாள்.)

**நிபுணிகை**— அம்மா, ஆரியகௌதமருடைய போக்கைப் பார்த்தீர்களா?.

**இராவதி**— இந்தக் கெட்ட பார்ப்பான் இவ்வாறன்றிப் பிழைப்பது எங்ஙனம்?.

**வகுளாவலிகை**— ஐயா, இவள் தேவியாரின் கட்டளைப்படி இவ்வாறு செய்தாள். இக்குற்றம், பிறர் வசத்திலிருக்கும் இவளைச் சாராது. பிரபுவே, அருள் புரியவேண்டும்.

(வகுளாவலிகையும், அவளால் தூண்டப்பட்ட மாளவிகையும் அடிபணிகின்றார்கள்.)

**அரசன்**— இவ்வாறாயின், உன் மீது குற்றமில்லை. எழுந்திரு அம்மா,.

---

நீ விஷயம்.—முன் வாக்கியத்திற்கு நாம்கூறிய உட்கருத்தே இவ்வாக்கியத்திற்கும் உட்கருத்தாம். "நீ அரசரது காமத்தூதுமொழியை என்னிடமிருந்து தெரிந்துகொண்டவளல்லவா? அதற்குத் தக்கபடி நடக்கவேண்டாமா" என்றான் விதூஷகன்.

ஐயா இவள்—புத்திசாதுரியம் மிகவும் பொருந்திய வகுளாவலிகை எவ்வளவு அழகாக மறுமொழி கூறுகின்றாள். "ஐயா, அசோகத்தை உதைத்தது தேவியாரின் கட்டளைப்படியே. நீங்கள் குறிப்பித்தபடி அரசரை ஊடலில் உதைக்க இவளுக்கு ஸ்வாதந்த்ரியம் ஏது. ஆகையால் அரசரை உதைக்காமல் அவருடன் தோழமைகொண்ட இவ்வசோகத்தை உதைக்கும்படி நேர்ந்த குற்றம், பிறர் வசத்திலிருக்கும் இவளைச் சாராது. இஃது அரசரையே சார்ந்தது. இனியேனும் இக்குற்றம் நேராவண்ணம் அரசர் அருள்புரிவாராக" என்று தொனிக்கும்வண்ணம் அரசனுடைய முன்பில் விதூஷகனிடம் சொல்லுகிறாள் வகுளாவலிகை.

இவ்வாறயின்.—பரமரஸிகனான அரசன், வகுளாவலிகையின் குறிப்பினை உணர்ந்தே, அதற்கும் மறுமொழியாமாறு இவ்வண்ணம் கூறுகின்றான். மாளவிகை, ஏதோ பெரியகுற்றம் செய்துவிட்டாற்போல

(மாளவிகையைக் கையால் தூக்கி எழுப்புகின்றன்.)

**விதூஷகன்**—நியாயம். இந்த விஷயத்தில் தேவியாரை வெகு மதிக்கவேண்டும்.

**அரசன்**—(சிரித்துக்கொண்டு)தோடையழகும் மலர்ச்சியுமுள்ள மாளவிகே, கடினமான இவ்வசோகமரக் கிளையை உதைத்ததில், தளிர்போல மெல்லிய உன் இடக் கால் இப்பொழுது நோவுபடவில்லையா?.

(மாளவிகை வெட்கத்தை வெளிப்படுத்திக்கொண்டு நிற்கின்றள்.)

**இராவதி**— என்னே ஐயரின் உள்ளம்!. வெண்ணெய் போவிருக்கின்றது.

---

வும், அதனைத் தான் பொறுத்தருளினற் போலவும் அரசன் பேசுவது, அப்போது மாளவிகையைச் சிறிது அச்சுறுத்தி, அவளைத் தன் விருப்பத்திற்கு உடன்படச் செய்வதற்கேயாம். "உத்திஷ்ட பத்ரே" என்பது மூலம். "பத்ரே" என்ற பதத்திற்கு "மங்களமுடையவளே" என்பது பொருள். சீராட்டும்பொழுது சிறியோர்களையும் "அம்மா" என்றழைக்கும் வழக்கத்தை அனுஸரித்து 'நாம் 'பத்ரே' என்பதை 'அம்மா' என்று மொழிபெயர்த்தோம்.

நியாயம்.—அரசன் தேவியை மதித்துக் கோபிக்காதிருப்பதாக மாளவிகைக்குத் தோன்றும்படி பேசுகின்றான். "இவ்வாறு மாளவிகையை இங்கு நாம் காணநேர்ந்தது, தேவியாரிட்ட கட்டளையாலன்றோ. ஆகையால் இந்த விஷயத்தில் தேவியிடம் நன்றிபாராட்ட வேண்டும்" என்பது உட்கருத்து.

தோடையழகு— " விலாவினி " என்ற பதத்தை " மலர்ச்சியுள்ளவளே " என்று மொழி பெயர்த்தோம். " மலர்ச்சி—இதனை வடநூலார் ' விலாசம் ' என்று கூறுப. தான் விரும்பிய தலைவனைக் கண்டக்கால் தலைவியினது நிற்கும்நிலையினும் இருக்கும்நிலையினும் உண்டாகுஞ் செவ்விய தோற்றமும் மந்தகாசமும் மதர்த்தபார்வையும்மலர்ச்சியாம்." என்பது நாடகவியலுரை. மாளவிகைக்கு இப்போது விலாஸம் உண்டாகத் தடையுண்டோ ?. அரசனது வினு மிகவும் ஸமயோசிதமானது. " கடினமான மரக்கிளையை உதையாமல் மெதுவான என் சரீரத்தை உதைக்கலாகாதா " என்று குறிப்பாலுணர்த்துகின்றான் அரசன்.

என்னே— " நவநீத ஹ்ருதய: " என்பது பாடம். வெண்ணெயை

**மாளவிகை**— வகுளாவலிகே, வா. போவோம். கட்டளையை நிறைவேற்றி விட்டோமென்று தேவியாரிடம் தெரிவிப்போம்.

**வகுளாவலிகை**— அவ்வாறே. ஆதலின் "என்னை அனுப்ப வேண்டும்" என்று அரசரிடம் விண்ணப்பம் செய்து விடை பெற்றுக்கொள்.

**அரசன்**—அம்மா போகலாம். இப்பொழுதுக்கேற்ற எனது வேண்டுகோளொன்றைக் கேள்.

**வகுளாவலிகை**— தோழி, மனமிருத்திக் கேள். பிரபுவே கட்டளையிடலாம்.

**அரசன்**— இவ்வசோகத்தை யொப்ப இந்த மனிதனும் மகிழ்வென்னும் மலரை நெடு நாளாகப் பெறவில்லை. ஆதலின், வேறு விருப்பமற்ற இவனுக்கும் உன் ஸ்பரிசமென்னும் அமுதத்தால் நீ தோஹதத்தை நிறைவேற்றுவாயாக.

**இராவதி**—(திடீரெனத் தோன்றி) நிறைவேற்றடி அம்மா, நிறைவேற்று. அசோகம் பூக்குமோ, பூக்காதோ, நிச்சயமில்லை.

---

யொப்ப மனம் உருகுகின்றதே என்று பரிஹஸிக்கின்றாள். "அவிநீத ஹ்ருதய:" என்ற பாடமானல் "பொல்லா மனவுடையவன்" என்பது பொருள்.

வா. போவோம்— இது, நாயிகையின் சிருங்கார லஜ்ஜையைக் குறிப்பிடும் காரியமாம்.

இவ்வசோகத்தை— "பூரய தோஹதமஸ்யாப்யநங்யருசே:" என்பது மூலம். தோஹதம்—வளம், ஆசை. ஸ்பரிசம்— தொடுதல், அதாவது இங்கு அணைதலாம். அசோகத்திற்குக் காலுதை தோஹதமாவது போல், குரவகத்திற்கு அணைதல் தோஹதமாகின்றது. ப்ரியங்கு மரத்திற்குத் தொடுதலே தோஹதமாம். "அநங்யருசே:" என்பதற்கு வேறு ஒன்றிலும் ஆசையில்லாத, ஸ்பர்சாம்ருதம் ஒன்றையே விரும்பும் என்று பொருள் கூறுவர். "வேறு ஸ்திரீகளிடம் விருப்பமில்லாத" என்பது சிலரது உரை.

நிறைவேற்றடி— இராவதியின் குணத்தை நினைத்தால், இவள் இதுவரை பொறுத்திருந்ததே ஆச்சரியம். இவளுடைய பொறுமை

இவர் பூப்பார், மேலும், பலிப்பார். இது திண்ணம்.

(எல்லாரும் இராவதியைக் கண்டு திடுக்கிட்டனர்.)

**அரசன்—** (மறைவாக) தோழ, இப்பொழுது நமக்கு வழி என்ன ?

**விதூஷகன்—**வேறு என்ன ? முழந்தாளின் வலிமைதான்.

**இராவதி—**வகுளாவலிகே, உன் ஏற்பாடு நன்று. மாளவிகே, ஐயருடைய வேண்டுகோளை முதலில் நிறைவேற்று.

**இருவரும்—**அம்மா, அருள்புரிக. பிரபுவின் நேசம் கைக்கொள்ள நாங்கள் யாவர் ?

[சென்றனர்.

**இராவதி—**ஐயோ. புருஷர்களை நம்பலாகாது. தனக்கு நேரிடும் கேட்டைச் சிறிதளவும் சிந்தியாமல் வேட்டுவனது பாட்டில் ஈடுபட்டு நிற்கும் மான்பேட்டையொப்பப் பேதையான நான், கடுகளவும் ஐயப்படாமலிருந்தமையால், எனக்கு இவ்வாறு ஏமாற்றம் ஏற்படுமென்று கருதினேனில்லை.

---

எவ்வளவு கீழ்மையில் வெளிவருகின்றது.

முழந்தாளின்— ஓடுவதுதான் வழி என்கிறான். இது பரிஹாஸப் பேச்சு. "முழந்தாள் நோவபட நமஸ்கரிக்க வேண்டுமென்கிறான்" என்று சிலர் கருத்துக் கூறுவர்.

அம்மா— "கே ஆவாம் பர்த்து: ப்ரணய பரிக்ரஹஸ்ய" என்பது மூலம். "பிரபுவின் நட்பைப் பெற நாங்கள் யாவர் ? எங்களுக்கு அவ்வாறான தகைமை உண்டோ ?. இல்லாததை எண்ணி வீணாக மனங் கலங்கவேண்டாம்." என்பது வெளிப்படையான கருத்து. "அரசரது நேசம் (அரசர் நேசத்துடன்) எங்களை இவ்வாறு கைக்கொண்டால் அதற்கு நாங்கள், என்ன செய்வது" என்பது உட்கருத்தாம். "கா வயம்" என்று பன்மையாகக்கொண்டு, "அரசாது நேசத்திற்கு நாங்கள் தகுதியற்றவர்களென்றால், நீயும் தகுதியற்றவளே. உனக்குத் தகுதியிருந்தால் எங்களுக்கும் உண்டு" என்று வகுளாவலிகை குறிப்பிடுவதாக ஒருவர் உரை எழுதியிருக்கின்றார். மொழி பெயர்ப்பில், பிரபுவின் நேசம் (நேசத்தை) கைக்கொள்ள என்றும், பிரபுவின் நேசமானது (எங்களைத் தானாகவே) கைக்கொள்ளும்பொழுது என்றும் இருவகையாகப்